ஸ்ரீ:






# ஸ்ரீ மகா கோவிந்த சுவாமிகள் நூற்றாண்டு விழா மலர்





வெளியீடு :
04.01.2009
"தவநெறி மன்றம்"
ஸ்ரீ மாணிக்க விநாயகர் வளாகம்,
36, சௌடாம்பிகா தெரு, துறையூர் – 621 010.
போன் : 04327–222889, 9442517952.

24-1



# வாழ்த்துரை

**முத்தமிழ்ப்பண்ணை அரங்கராசன்**
வைரிசெட்டிப்பாளையம்.

03.06.1979 ஆம் நாள் 'தவநெறி மன்றம்' முதல் நிகழ்ச்சியினை ஏற்படுத்தியது. அன்று முதல் இன்று வரை மன்ற நிகழ்ச்சிகளில் பங்கு பெற்றுப் பயனடைபவர்களுள் நானும் ஒருவன்.

30.05.1999 முதல் ஞாயிறு தோறும் தொடர்ந்து மன்றத்தில் தத்துவங்களைப் பேசி வருகிறேன் என்பதை மன்றத்தார் அறிவர்.

என் அத்தையின் கணவர் தண்டலை வித்வான் திரு.டி.சி.ஜகந்நாத ரெட்டியார் அவர்களுக்குத் தொடக்க நாளிலிருந்து திருப்பராய்த்துறை ஸ்ரீசுவாமி சித்பவானந்தருடனும் ஸ்ரீராமகிருஷ்ண தபோவனத்துடனும் நெருங்கிய தொடர்பு உண்டு. அவரால் எனக்குப் பழக்கம் ஏற்பட்டது. மாமார் திரு.டி.சி.ஜகந்நாத ரெட்டியார் அவர்களின் பொறுப்பில் சிக்கத்தம்பூர்பாளையம் ஸ்ரீபிரஹ்மானந்த சுவாமிகள் மடாலயமும் இருந்ததால் எனக்கு மடாலயத் தொடர்பும், சாதுக்கள் தொடர்பும் கிடைத்தது.

1957ல் இளம் பருவத்திலேயே கட்டபொம்மன் படிப்பகம் தொடங்கினோம். அதனால் வாசிப்போர் தொடர்பும்,

1963 லிருந்து இலக்கியத் திருவிழா நிகழ்ச்சி நடத்தியதால் இலக்கியப் பேச்சாளர்கள் தொடர்பும்,

1962ல் அரசியல் கட்சி தொடர்புகளால் அரசியல்வாதிகள், அதிகாரிகள் தொடர்பும், கூட்டுறவு இயக்கங்களில் பொறுப்பேற்றதால் கூட்டுறவாளர்கள் தொடர்பும்,

'முத்தமிழ்ப்பண்ணை' என்னும் இலக்கிய ஏடு நடத்தியதால் எழுத்தாளர்கள் நட்பும்,

1978ல் 'கல்விக்கற்பகம்' – தொடங்கியதால் கல்வியாளர்கள் பரிச்சயமும்,

1979ல் தவநெறி மன்றத்தோடு தொடர்பு கொண்டதால் தவசீலர்களின் அன்பும்,

இப்படி இளமை தொடங்கி இன்று வரை பலரோடும் பழகும் வாய்ப்பும் – நல்லோர் இணக்கமும் ஏற்பட்டது.

1974 முதல் 1991 வரை சுவாமி ஸ்ரீ மகா கோவிந்தசுவாமிகளிடம் வேதாந்த பாடம் பயின்றதால் தவநெறி மன்றத்தில் தத்துவ சொற்பொழிவுகள் ஆற்ற வாய்ப்புக் கிடைத்தது.

பெரியவர் பா.மு.மாரிமுத்து முதலியார், மாமார் டி.சி.ஜகந்நாத ரெட்டியார், அன்பர் எம்.சுப்ரமணியம், ஆடிட்டர் ஆ.சீராளன் ஆகியோர்களால் வாழையடி வாழையெனத் தொடர்ந்து தவநெறி மன்ற நிகழ்ச்சிகள் நடைபெற்று வருகின்றன.

மன்த்தினர் 30 ஆண்டுகளாக காலந்தவறாமல் பக்தி நெறியோடு, கரும யோகமாக ஞானத்தைப் பெற்று வருகின்றனர். இம்மன்றத்தில் எண்ணற்ற விழாக்கள் சிறப்பாக நடந்து வருகின்றன.

இப்போது ஸ்ரீமகா கோவிந்த சுவாமிகள் நூற்றாண்டு விழா இங்கே நடைபெறுவதும், அதன் பயனாக ஸ்ரீ மகா கோவிந்த சுவாமிகள் வரலாறும், சுவாமி சிவானந்தரின் 'மன அமைதி' என்கின்ற நூலும் வெளியிடுவது மகிழ்ச்சி தருகிறது.



# வாழ்த்துரை

**செந்நாப்புலவர் சு.சப்தரிஷி**
வைரிசெட்டிப்பாளையம்.

வைரிசெட்டிப்பாளையம் சபாபதி அய்யர் சிறந்த ஆன்மிகவாதியாகவும் கவிஞராகவும் இருந்தார் என்பது பெரியோர்கள் அறிந்ததே. அவர் தம் பேரனாகிய நான், நல்ல ஆன்மிக வழியில் வரவேண்டுமென விரும்பினார். அவரின் ஆசியாலும், கொப்பமாபுரி குங்குமாம்பிகையின் அருளினாலும் வளர்ந்தேன்.

மயிலம் கல்லூரியில் தமிழ் கற்கும்போது மயிலம் சுவாமிகளின் நேர் பார்வையில் என் கல்வி சிறப்புற்றது. சுவாமிகளின் வழிகாட்டுதலில் 'பெரிய புராணம்' பேச வைத்தார்கள்.

வைரிசெட்டிப்பாளையம் சு.வி.வி.மேனிலைப்பள்ளியில் தமிழாசிரியராகப் பணியாற்றினேன். பல்வேறு இலக்கிய நிகழ்ச்சிகளிலும் ஆன்மிக விழாக்களிலும் பங்கு பெறும் வாய்ப்புக் கிட்டியது.

அப்போது, கொப்பமாபுரியில் ஸ்ரீராமாசிரமத்தில் தங்கியிருந்த ஸ்ரீமகா. கோவிந்த சுவாமிகளைச் சந்திக்கும் பேறு பெற்றேன். அன்பர்களுடன் சென்று சுவாமிகளிடம் முறையாக வேதாந்த பாடம் பயின்றேன். சுவாமிகளின் அன்புக்குப் பாத்திரமானேன். பல நிகழ்ச்சிகளுக்கு அழைத்துச் சென்று என்னைப் பேசப் பணித்தார்; கேட்டு மகிழ்ந்தார்.

1999ல் துறையூர் தவநெறி மன்றத்தில் 'பெரிய புராணம்' – ஞாயிறு தோறும் தொடர்ந்து சொற்பொழிவு ஆற்ற வேண்டுமென்று அன்பர் எம்.சுப்ரமணியன் கட்டளையிட்டார். அவரின் வழிகாட்டுதலில் 'பெரிய புராணம்' சொற்பொழிவு நிறைவு பெற்றது.

தவநெறிச் செல்வர் ஆ.சீராளன் கேட்டுக் கொண்டதற்கு இணங்க, தவநெறி மன்றத்தில் 'பிரபுலிங்க லீலை' – தொடர் பொழிவு ஆற்றினேன்.

அன்பர்கள், திருவாசகம் – விளக்க வேண்டுமென்றதால், இடையே 'திருவாசகம்' விளக்கவுரை செய்து வருகிறேன்.

தவநெறி மன்றத்தில் 10 ஆண்டுகளாகத் தொடர்ந்து உரையாற்றவும் அன்பர்களைக் கண்டு மகிழவும் நல்ல வாய்ப்புக் கிட்டியது.

தற்போது மகா கோவிந்த சுவாமிகள் நூற்றாண்டு விழா நடைபெறுகிறது. துறையூர் தவநெறி மன்றத்தில் பல விழாக்கள் நடைபெற்றுள்ளன. அதன் வழியில் மகா கோவிந்த சுவாமிகள் நூற்றாண்டு விழாவும் நடத்தத் திட்டமிட்டனர். அதன் பயனாக இம்மலர் வெளிவருவது மிக்க மகிழ்ச்சியைத் தருகிறது.

தவநெறி மன்றம் சிறப்புடன் செயல்பட பல்லாற்றானும் உதவி வரும் சான்றோர்களும் அன்பர்களும் எல்லா வளங்களும் நலங்களும் பெற கொப்பமாபுரி குங்குமாம்பிகையைப் பிரார்த்திக்கிறேன்.

# "தவநெறி மன்றம்" - வரலாறு

**தோற்றம்**

திருப்பராய்த்துறை ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவன நிறுவனர் ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள் "அந்தர்யோகம்" என்கிற புதிய ஆன்மீகப் பயிற்சியைத் தொடங்கினார்கள். அவற்றில் கலந்து கொண்ட அன்பர்கள், மன அமைதியும் மகிழ்ச்சியும் அடைந்தனர். துறையூர் நகரில், அந்தர்யோகம் நடத்தி, இப்பகுதி மக்களை ஆன்மீகப் பாதையில் அழைத்துச்செல்ல, துறையூர் திரு.பா.மு.மாரிமுத்து முதலியார் அவர்களும், தண்டலை வித்வான் திரு.டி.சி.ஜகந்நாத ரெட்டியார் அவர்களும் எண்ணம் கொண்டனர்.

"தவநெறி மன்றம்" என்கிற அமைப்பினை 1979 ஆம் ஆண்டு இவ்விரு பெருமக்களும் ஏற்படுத்தினார்கள். துறையூர் செங்குந்தர் பள்ளியில், தபோவனச் சாதுக்களைக் கொண்டு, மூன்று மாதத்திற்கு ஒரு அந்தர்யோக நிகழ்ச்சி என்ற முறையில் சிறப்பாக நடத்தி வந்தனர்.

வயோதிகம் காரணமாக 1983 ஆம் ஆண்டு திரு. பா. மு. மாரிமுத்து முதலியார் அவர்கள் காலமானார்கள். அதனால் தவநெறி மன்ற நிகழ்ச்சிகள் செயலற்றுத் தடைப்பட்டன. அன்பர்கள் பலரின் வேண்டுகோட்கிணங்கி, காலஞ் சென்ற முதலியார் அவர்கள்விட்டுச் சென்ற பணியினைத் திரு. எம். சுப்ரமணியன் அவர்கள் மேற்கொண்டார்கள்.

1985ஆம் ஆண்டிலிருந்து, மீண்டும் தொடர்ந்து 1991ஆம் ஆண்டு வரை அந்தர்யோக நிகழ்ச்சிகள் நடந்து வந்தன. ஸ்ரீசுவாமி நித்தியானந்தா, ஸ்ரீசுவாமி ஆத்மானந்தா, ஸ்ரீசுவாமி குஹானந்தா, ஸ்ரீசுவாமி பரானந்தா, ஸ்ரீசுவாமி அகிலானந்தா, ஸ்ரீசுவாமி சதானந்தா, ஸ்ரீசுவாமி ஓங்காரானந்தா போன்றோர் நிகழ்ச்சிகளைச் சிறப்பாக நடத்தி, அருளுரை வழங்கினார்கள்.

**ஸ்ரீ மத்பகவத் கீதை**

ஸ்ரீ மத் ஸ்வாமி ஓங்காரானந்தா அவர்களால் ஸ்ரீமத் பகவத் கீதையின் அனைத்து அத்தியாயங்களையும் வகுப்பாக நடத்தத் திட்டமிடப்பட்டது. அதன்படி 1990 ஆம் ஆண்டு முதல், ஆண்டுதோறும் நடத்துவதாக முடிவு செய்யப்பெற்றது. 2007ஆம் ஆண்டுவரை 11 அத்தியாயம் சிறப்பாக வகுப்புகள் நடந்தன.

**உபநிஷத்**

சுவாமிகள் மாலையில் கீதை பேசிய நாட்களில், காலை வேளையில் உபநிஷத் வகுப்புகள் நடத்தினார்கள். முண்டகோபநிஷத், தத்துவ போதசாரம், கடோபநிஷத் ஆகியவை நடத்தப்பெற்றன. இந்நிகழ்ச்சிகள், ஸ்ரீ வாசவி மஹால், செங்குந்தர் மேல்நிலைப்பள்ளி, திவ்யப்பிரியா திருமண மண்டபம் ஆகிய இடங்களில் நடத்தப்பெற்றன.

**ஸ்ரீமத்பாகவதம்**

திருவேடகம் ஸ்ரீ விவேகானந்தா கல்லூரி முன்னாள் முதல்வர் டாக்டர் திரு. க. சுப்ரமணியன் அவர்கள் 09.05.1993 முதல் 15.05.1993 முடிய திவ்யப்பிரியா திருமண மண்டபத்தில் , இரவு 6.30மணிமுதல் 8.30 மணி முடிய ஸ்ரீமத் பாகவதம் உபந்யாசம் செய்தார்கள்.

**ஸ்ரீமகாபாரதம்**

முதல்வர் டாக்டர். க. சுப்ரமணியன் அவர்கள் 09.08.1998 முதல் 14.08.1998 முடிய திவ்யப்பிரியா திருமண மண்டபத்தில் இரவு 6.30 மணிமுதல் 8.30 மணிவரை ஸ்ரீ மகாபாரதம் விரிவுரை நிகழ்த்தினார்கள்.

**நூற்றாண்டு விழா**

ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்த மஹராஜ் அவர்களின் நூற்றாண்டு விழாவை ஒட்டி 21.07.1997 முதல் 29.07.1997 முடிய 9 நாட்கள் "ஸ்ரீமத் பகவத்கீதை ஸாரம் " எனும் பொருளில் ஸ்ரீசுவாமி ஓங்காரானந்தா அவர்கள் உரையாற்றினார்கள். 30.07.1997 புதன்கிழமையன்று, துறையூர் திவ்யப்பிரியா திருமண மண்டபத்தில் காலை முதல் மாலை

வரை, "ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் நூற்றாண்டு விழா" நிகழ்ச்சிகள் சிறப்பாக நடைபெற்றன. மாலை ஊர்வலமும், இரவு தபோவன மாணவர்கள் நடத்திய நாடகமும் சிறப்பாக நடைபெற்றன. ஸ்ரீ சுவாமி நித்யானந்தா, ஸ்ரீ சுவாமி ஓங்காரானந்தா, ஸ்ரீசுவாமி கிருஷ்ணானந்தா, ஸ்ரீசுவாமி அம்பிகானந்தா ஆகியோர் நிகழ்ச்சிகளில் பங்கு பெற்றுச் சிறப்பித்தனர்.

**திருவாசகம்**

ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர் அவர்களால் "திருவாசகம்" சொற்பொழிவு 13.07.1990 முதல் 06.12.2000 வரை 37 கூட்டங்கள் நடைபெற்றுள்ளன. துறையூர் ஸ்ரீ வாசவி மஹாலிலும், தவநெறி மன்ற கட்டடத்திலும் நிகழ்ச்சிகள் நடைபெற்றன.

**திருவாசகம் முற்றோதல்**

துறையூர் ஸ்ரீகாசி விஸ்வநாதர் ஆலயத்தில் 27.09.1992ஆம் நாள் காலை முதல் மாலை வரை, சிறந்த ஓதுவார்களைக் கொண்டு திருவாசகம் முற்றோதல் நிகழ்ச்சி நடைபெற்றது.

**தவநெறி மன்றம்**

தவநெறி மன்றம் நிகழ்ச்சிகள் தொடர்ந்து ஒரே இடத்தில் நடத்தி வர இயலவில்லை.

இந்நிலையில், திரு. மா.இளங்கோ அவர்கள், சௌடாம்பிகா தெருவிலுள்ள, தம்முடைய ஸ்ரீ மாணிக்க விநாயகர் வளாகத்தின் மேல்மாடியில் சுமார் இலட்ச ரூபாய் செலவில் நிரந்தரக் கொட்டகை அமைத்துத் தவநெறி மன்ற நிகழ்ச்சிகள் நடைபெற, இடம் இலவசமாக வழங்கியுள்ளார்கள்.

10.12.1999 முதல் மன்ற நிகழ்ச்சிகள் தொடர்ச்சியாக ஒரே இடத்தில் நடந்து வருகின்றன. ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர் அவர்கள் புது இடத்தில் ஐக்கிய வழிபாடும், திருவாசகத் தொடர் உரையும் நடத்தித் தொடங்கி வைத்தார்கள்.

**கைவல்ய நவநீதம்**

நன்னிலம் ஸ்ரீ தாண்டவராய சுவாமிகள் அருளிய "கைவல்ய நவநீதம்" என்கிற வேதாந்த பாடம் 30.05.1999 முதல் ஞாயிறு தோறும் முத்தமிழ்ப்பண்ணை திரு. அரங்கராசன் அவர்களால் நடத்தப்பட்டது.

**பெரியபுராணம்**

சேக்கிழார் சுவாமிகள் அருளிய "திருத்தொண்டர் புராணம்" என்னும் "பெரிய புராணம்" விரிவுரை செந்நாப்புலவர் திரு. சப்தரிஷி அவர்களால் ஞாயிறுதோறும் நடத்தப்பட்டது.

**பாராட்டு விழா**

கைவல்ய நவநீத போதகர் முத்தமிழ்ப்பண்ணை திரு. அரசங்கராசன் அவர்கட்கும், பெரிய புராணம் விரிவுரையாளர் செந்நாப்புலவர் திரு. சு.சப்தரிஷி அவர்கட்கும் 25.1.2004 ஞாயிற்றுக்கிழமை, தேனீ ஸ்ரீசித்பவாநந்த ஆஸ்ரமத் தலைவர் ஸ்வாமீ ஸ்ரீமத் ஓங்காராநந்தா அவர்கள் தலைமையில் பாராட்டு விழா சிறப்பாக நடைபெற்றது.

**இராமாயணம்**

திருப்பராய்துறை ஸ்ரீராமகிருஷ்ண தபோவனத் தலைவர் ஸ்ரீமத் சுவாமி சதானந்தா அவர்கள் ஆசியுரையுடன் தொடங்கி, திருவேடகம் விவேகாநந்த கல்லூரி முன்னாள் முதல்வர், மதுரைப்பேராசிரியர் திரு. கு. இராமமூர்த்தி அவர்கள் 02.02.2003 முதல் 24.06. 2007 முடிய, இராமாயண விரிவுரை தொடர் சொற்பொழிவு செய்தார்கள். 24.06.2007 அன்று சுவாமி ஸ்ரீமத் சதானந்தா அவர்களின் ஆசியுரையுடனும் அன்பர்கள் கருத்துரைகளுடனும் நிறைவு விழா இனிது நிறைவு பெற்றது.

**பட்டனார் கீதை**

மதுரை பட்டனார் அருளிய "பரமார்த்த தரிசனம்" என்னும் "பட்டனார் கீதை" விளக்கம் 11.04.2004 முதல் ஞாயிறு தோறும் மாலை நடைபெறுகிறது.

**பிரபு லிங்க லீலை**

கற்பனைக் களஞ்சியம் துறைமங்களம் ஸ்ரீ சிவப்பிரகாச சுவாமிகள் அருளிய "பிரபு லிங்க லீலை" என்னும் தத்துவ நூல் விரிவுரை 11.04.2004 முதல் செந்நாப்புலவர் திரு. சு.சப்தரிஷி அவர்கள் செய்கின்றார்கள்.

**ஈஸாவாஸ்ய உபநிஷத்**

சிக்கத்தம்பூர் ஸ்ரீ ப்ரஹ்மானந்த சுவாமிகள் மடாலய, ப்ரஹமச்சாரி திரு. சிவராமகிருஷ்ணன், அவர்கள் "ஈசாவாஸ்ய உபநிஷத்" விளக்கவுரை ஆற்றினார்கள்.

**தொடர் பணி**

11.04.2004 முதல் திரு. ஆ. சீராளன் அவர்கள், தவநெறி மன்ற நிகழ்ச்சிகளையும், அறிவு தானத்திட்ட நிகழ்ச்சிகளையும் தொடர்ந்து தொய்வின்றி நடத்தி வருகிறார்கள்.

பள்ளிகள் தோறம் அறிவு தானத்திட்டமும் கிராமங்கள் தோறும் மழை வேண்டி கூட்டுப் பிரார்த்தனையும் நடைபெற்று வருகின்றன.

தவநெறி மன்றத்தில், நாட்டிற்குழைத்த நல்லோர்கள் பற்றியும், ஆன்மீகப் பெரியோர்கள் பற்றியும், புலவர் பெருமக்களும், தவநெறி மன்ற அன்பர்களும் அவ்வப்போது சொற்பொழிவு செய்து வருகிறார்கள்.

ஞாயிறு தோறும் மாலை 5 மணி முதல் 7 வரை பஜனை, நாமாவளி, சொற்பொழிவு, மங்களம், ஆரதி நடைபெற்று வருகிறது.

**தொடர்புக்கு**

**ஆ.சீராளன்,**
ஸ்ரீ மாணிக்க விநாயகர் வளாகம்,
36, சௌடாம்பிகா தெரு, துறையூர் – 621 010.
போன் : 04327–222889, 9442517952.



# ஸ்ரீ மகா கோவிந்த சுவாமிகள் வரலாறு

"குருவாய் வருவாய் அருள்வாய் குகனே"

**முன்னுரை :**

தன்னை அறியாது, தனக்கு ஆதாரத் தலைவனையும் அறியாது சுழற்காற்றுற்ற செத்தைபோல் அலையும் அஞ்ஞானிகட்கு, 'உன்னை நீ அறிந்தாயாகில் உனக்கொரு கேடும் இல்லை' என உபதேசித்துத் தன்னையும் தனக்காதாரத் தலைவனையும் காட்டி, இம்மையில் விதேகமுக்தனாக வாழச் செய்யும், குரு என்னும் நடமாடும் தெய்வங்கள் நம் தமிழகத்தில் தோன்றி, இம்மண்ணை ஞானபூமியாக்கி வளம்பெறச் செய்துள்ளனர்.

இத்தகைய புண்ணிய சீலர்களில், ஞானிகளில், நம் குரு, ஸ்ரீ மகா கோவிந்த சுவாமிகளும் ஒருவர். இவர் ஆண்டாள் அம்மையார் அவதாரம் செய்த ஸ்ரீ வில்லிப்புத்தூரின் அருகில் உள்ள, இயற்கை எழில்மிக்க இராஜபாளையம் என்கிற சீரூரில் (விருது நகர் மாவட்டம்) பிறந்தார். இவர் பிறந்த நாள் 13.08.1908 ஆம் ஆண்டு, சதய நட்சத்திரம் கூடிய குருவாரம். தெய்வ பக்தி மிக்க சான்றோர் எ.சு. குமாரராஜா– இராஜாம்பாள் ஆகிய தம்பதியர்க்கு, க்ஷத்திரிய குலத்திலேயே சிறந்த ஞானவீரம் மிக்க நம் சுவாமிகள் பிறந்தார்.

**கல்வி:**

வைணவ மரபினர் என்ற காரணத்தால், பெற்றோர்கள் கோவிந்தராஜா எனும் நாமம் சூட்டினர். கோவிந்தராஜா 5 ஆம் வயது முதல் 17 ஆம் வயது வரை சிரத்தையுடன் கற்றார். தமிழ், ஆங்கிலம் ஆகிய மொழிகளில் சிறந்த பயிற்சியும், தன் குலமொழியுமாகிய தெலுங்கு மொழியில் நல் ஞானமும் பெற்று விளங்கினார். இளமையிலேயே பக்தியும் கொண்டிருந்தார். தனித்திருந்தும், ஞானப்பசி கொண்டு விழிந்திருந்தும் வாழ்ந்தார்.

**துறவு வேட்கை:**

கோவிந்தராஜா இவ்வாறு வாழ்ந்து தனது 19ஆம் வயதைத் தொட்டபோது, பெற்றோர்கள் திருமணம் பற்றிய பேச்சைப் பேசினர். துறவறத்தையே தன்னுடைய தூய மனம் விரும்புகிறது என்று, பணிவுடனும், அதே சமயம் துணிவுடனும் கோவிந்தராஜா என்கிற அந்த வைராக்ய வீரர் மொழிந்தார். கேட்ட பெற்றோர்களால் ஏதும் சொல்ல முடியாமல் மகனின் எண்ணத்தை ஏற்றனர். துறவு உலகுக்கு இத்தகையதோர் தூண்டா மணிவிளக்குக் கிடைக்க இறைவனின் திருவருள் கூட்டியது. "அவன்" வழி "இவன்" துறவியாகிறான், அவ்வளவுதான்.

**துறவியாதல்:**

கோவிந்தராஜா ஞானத் தேடலுடன் இராஜபாளையத்தினின்றும் புறப்பட்டார். காரைக்குடியின் அருகில் உள்ள கோவிலூர் வந்து, அங்குள்ள மடாலயத்தை அடைந்தார்.

அத்வைத ஞான பரம்பரையினராகிய, ஸ்ரீ மகாதேவ ஞான தேசிக சுவாமிகள், அங்கு குருமூர்த்தியாக இருந்து அருளாட்சி செய்து வந்தனர்.

ஸ்ரீ மகாதேவ ஞான தேசிக சுவாமிகளைக் கண்ட கோவிந்தராஜா, அவருடைய திருவடியில் வீழ்ந்து வணங்கி அவருடைய திருவருளால் அவரை ஞான குருவாக ஏற்றார். காஷாய சந்நியாசம் பெற்று, "கோவிந்தசுவாமி" எனும் தீக்ஷா நாமமும் பெற்றார்.

**பாடம் கேட்டல்:**

கோவிலூர் மடாலயத்தின் மரபுப்படி, அங்கு உபதேச பாடமாக அமைக்கப்பட்ட " நாநா ஜீவவாதக் கட்டளை" முதல், "ஞான வாசிட்டம் " வரையுள்ள வேதாந்த ஞான சாத்திரங்களையும், மற்றும் உயர்ந்த நூல்களையும் உபதேசப் பாடமாகக் கேட்டார். அங்கிருந்த அசேஷ சாத்திர பாண்டித்தியமும், ஆத்ம நிஷ்டையும் உடைய, சிறந்த

ஞான மூர்த்தியாகத் திகழ்ந்த, ஸ்ரீ வீரநாராயண ஞான தேசிக சுவாமிகளிடம், தனக்குச் சாஸ்திரங்களில் ஏற்பட்ட சந்தேங்களைக் கேட்டுத் தெளிந்தார். சாத்திர பாடங்களில் தெளிவடைதலே தலைசிறந்த ஞானவாயிலாகும்.

**சமஸ்கிருதம் கற்றல்:**

இப்பொழுது சுவாமிகட்கு 29ஆம் வயது. வேதாந்த ஞான சாத்திரங்களில் சிரவணம், மனனம், நிதித்தியாசனம், மகாவாக்கிய விசாரம் செய்து, தன் குருநாதரின் திருவருளால் மகிழ்ந்திருந்தார். சுவாமிகட்கு, வடநாட்டில் உள்ள காசி முதலிய புண்ணியத் தலங்களைத் தரிசிக்க வேண்டும் என்னும் எண்ணமும், சமஸ்கிருதம் கற்று, அதிலுள்ள வேதாந்த நூல்களைக் கற்க வேண்டும் எனும் எண்ணமும் தோன்றின. இதனைக் தன்னுடைய குருவாகிய ஸ்ரீ மகாதேவஞானதேசிக சுவாமிகளிடம் கூறினார். அவரும் மகிழ்ந்து அனுமதியளிக்க, சுவாமிகள் காசி சென்று கங்கை நீராடி விசுவநாதனை வணங்கி மகிழ்ந்தார்கள்.

பின்னர் சுவாமிகள் அரித்துவாரம் சென்று, அங்கு கனகல் எனும் பகுதியில் உள்ள ஸ்ரீ சூரத்கிரி மகேசுவரானந்த கிரி மண்டலேசுவர சுவாமிகளிடம் சமஸ்கிருதம் பயின்றார். ஸ்ரீ பகவத் கீதை முதலிய வேதாந்த பக்தி சாத்திரங்களைக் கற்றார். அப்போது அந்த சுவாமிகளால் "கோவிந்தானந்த கிரி" எனும் நாமம் சூட்டப்பெற்றார். இவ்வாறு ஓராண்டு காலம் தங்கியிருந்தார் சுவாமிகள்.

**மடாதிபதி ஆதல்:**

பின்னர் அங்கிருந்து புறப்பட்டுக் கோவிலூர் வந்தார்கள். தம் ஞான குருவாகிய ஸ்ரீமகாதேவஞான தேசிக சுவாமிகளுடன் தங்கி வேதாந்த ஞான சாத்திர ஆய்வுகள் செய்து வந்தனர்.

இது காலத்தில், தஞ்சாவூர் கரந்தை ஸ்ரீ பாலைய ஞான தேசிக சுவாமிகள் மடாலயத்திற்குத் தலைவர் ஒருவர் தேவைப்பட்டார். அதற்குத் தலைவராக இருந்த ஸ்ரீவீர. கிருஷ்ண சுவாமிகள் தமது

முதுமையை எண்ணி கோவிலூர் மடாலயக் குருமூர்த்திகளிடம் தெரிவித்தார்.

இதைக்கேட்ட ஸ்ரீ மாகதேவ ஞான தேசிக சுவாமிகள், கரந்தை மடத்திற்குத் தகுதியானவர், தமது தலைமைச் சீடர் கோவிந்த சுவாமிகளே எனத் தெளிந்து நம் சுவாமிகளை அனுப்பி வைத்தார்கள். நம் சுவாமிகள் தம் குருவின் அருளால் 16.09.1942 ஆம் நாள் தஞ்சாவூர் கரந்தை பாலைய சுவாமிகள் மடாலயத் தலைவராகப் பொறுப்பேற்றார்.

சுவாமிகள் அம்மடாலயத் தலைவராகி பூசனைகளையும், போதனைகளையும் சிறப்பாக ஆற்றி வந்தனர்.

அப்பொழுது தஞ்சையில் இருந்த சிறந்த பேராசிரியர்கள், மற்றும் ஆன்மீக அன்பர்களுடன் சுவாமிகளுக்கு நல்ல தொடர்பு ஏற்பட்டது. மடம் எப்பொழுதும் சத்சங்க இடமாகவே இருந்தது.

**ஏகாம்பரக்குப்பம்பேட்டை செல்லுதல்:**

காசி வாசி ஸ்ரீ சிவானந்த யதீந்திர சுவாமிகள் என்பவர், சித்தூர் மாவட்டம், ஏகாம்பரக்குப்பம்பேட்டையில் ஒரு சிறந்த மடாலயம் அமைத்துத் தலைவராக இருந்தனர். தமது உபாசனா மூர்த்தியாகிய ஸ்ரீ சிவசுப்பிரமணிய சுவாமியின் குருதேவரின் உடனிருந்தவர்; மிகச் சிறந்த ஞானி; வேத மொழிபெயர்ப்பு ஆசிரியர். அவர் சமாதி அடைந்ததும், 1948 ஆம் ஆண்டு நம் சுவாமிகள், அந்த ஸ்ரீ சிவசுப்பிரமணிய சிவானந்த யதீந்திர சுவாமிகள் திருமடத்திற்குத் தலைவரானார். அதனால் தஞ்சாவூர் மடத்திற்குத் தலைவராக ஸ்ரீ மகா வாசுதேவ சுவாமிகளை நியமித்தார்கள்.

ஆந்திர மாநில ஏகாம்பரக்குப்பம் பேட்டை மடாலயம் மிகவும் சிறப்பாக முன்னேறியது. ஆந்திர மாநிலத்திலும் பல அன்பர்களுக்கு வேதாந்த போதனைகளைச் செய்து வந்தார். தெலுங்கு மொழியில் பாண்டித்யம் பெற்றதால், பல இடங்கட்குச் சென்று சொற்பொழிவுகள் ஆற்றி வந்தார்கள்.

**மீண்டும் தஞ்சாவூர் வருதல்:**

1956 ஆம் ஆண்டு, தஞ்சையில் ஸ்ரீ மகா வாசுதேவ சுவாமிகள் சமாதி அடையவே, மீண்டும் நம் சுவாமிகள் தஞ்சைக்கே வரவேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. ஏகாம்பரக் குப்பம் பேட்டையில், மிகச் சிறந்த அன்பரும், சுவாமிகளின் சீடராகவும் இருந்த திரு. வெங்கடேச முதலியாரைப் பவர் ஏஜண்டாக நியமித்துவிட்டுச் சுவாமிகள் தஞ்சைக்கு வந்தார். தஞ்சை மடாலயத்தைப் புதுப்பித்து மிகவும் சிறப்பாக நிர்வாகம் செய்து வந்தார்கள்.

**நன்னிலம் ஸ்ரீ தாண்டவேசுவர சுவாமிகள் சமாதி ஆலய திருப்பணி:**

வேதாந்த ஞான சாத்திரங்களின் சாரமான விஷயங்களைச், சாதனம் முதல் சாத்தியம் வரை முறையாகக் கூறுவதும், ஆத்மப் பிரம்ம ஐக்கிய ஞானமடைந்த ஞானிகளால் "சிறந்த ஞானநூல்" எனப்போற்றப் பெற்றதுமாகிய "கைவல்ய நவநீதம்" என்னும் ஞான நூலைச் சாதகர்கள் நன்கு புரிந்து கொள்ள வேண்டும் என சுவாமிகள் விரும்பினார்கள்.

அக் கைவல்ய நவநீத நூலின் ஆசிரியர், ஸ்ரீ தாண்டவேசுவர சுவாமிகளின் சமாதி ஆலயம், தஞ்சை மாவட்டம் நன்னிலத்தில் சீர்குலைந்து காணப்பட்டது. ஸ்ரீ தாண்டவேசுவர சுவாமிகளின் ஞானகுரு, ஸ்ரீ நாராயண ஞான தேசிக சுவாமிகளின் சமாதியும் சீர்குலைந்து காணப்பட்டது. இவைகளின் திருப்பணியை இந்து அறநிலையத்துறை ஏற்றுச் செய்வதாக ஏற்றுக் கொண்டு, அதன் தர்மகர்த்தாவாக நியமனம் செய்யப் பெற்றார்கள்.

இப்பணியைத் தலைமேற்கொண்ட காரணத்தால், தஞ்சாவூர் ஸ்ரீ பாலைய ஞானதேசிக சுவாமிகள் திருமடத்திற்குத் தமது சீடராகிய ஸ்ரீ மு.கோ. கிருஷ்ணசுவாமிகளைத் தலைவராக நியமனம் செய்தார்கள்.

1959 ஆம் ஆண்டு டிசம்பர் மாதத்திலிருந்து, நன்னிலம் சென்று ஸ்ரீ தாண்டவேசுவர சுவாமிகள் சமாதி ஆலயத் திருப்பணிகளில் ஈடுபட்டார்கள் நம் சுவாமிகள்.

**கொப்பமாபுரி வருகை:**

ஸ்ரீ தாண்டவேசுவர சுவாமிகள் சமாதி ஆலய திருப்பணியில் ஈடுபட்ட சுவாமிகள், பல அன்பர்களிடமும் நிதியுதவிப் பெற்று சீரும் சிறப்புடன் திருப்பணி செய்து வந்தார்கள். திருச்சி மாவட்டம், கொப்பமாபுரியில் வாழ்ந்த, ஆன்மிகச் செல்வரும், கொடையாளருமாகிய திரு. நடராஜ ரெட்டியார் திருமதி ருக்மணி அம்மையார் ஆகிய தம்பதியர்களிடம் நிதியுதவி கேட்டு நம் சுவாமிகள் வந்தார்கள். சுவாமிகளின் ஞானத் தெளிவை உணர்ந்த தம்பதியர், நிதியுதவி செய்ததுடன், சுவாமிகளைத் தங்கள் இடத்திலேயே தங்கி, ஞான பாட உபதேசம் செய்யவேண்டும் எனக் கேட்டனர்.

நன்னிலத்தில் ஆலயத்தின் திருப்பணியையும், கைவல்ய நவநீத மண்டபத்தின் திருப்பணியையும் நிறைவு செய்து 04.09.1968 ஆம் நாள் கும்பாபிஷேகம் செய்து முடித்தார்கள்.

பின்னர் சுவாமிகள் நன்னில ஆலயத்தில் பூசனைகளும், குருபூஜை விழாக்களும் எப்பொழுதும் சிறப்பாக நடைபெற ஏற்பாடுகள் செய்தார்கள்.

பின்னர், நம் சுவாமிகள் 1970 ஆம் ஆண்டு ஜூன் மாதம் கொப்பமாபுரிக்கு வருகை தந்தார்கள். கொப்பமாபுரியிலேயே தங்கினார்கள். திரு. நடராஜ ரெட்டியார் – திருமதி. ருக்மணி அம்மையார் தம்பதியினர்க்கு வேதாந்த பாடங்களைப் போதித்து வந்தார்கள். ஸ்ரீ இராம ஆசிரம் அமைத்து, அதிலேயே ஏகாந்த வாசமாய் ஆத்மானு சந்தான தியானம் செய்து வந்தார்கள்.

மற்றும் தன்னைச் சார்ந்த சீடர்களுக்கெல்லாம் வேதாந்த பாடம் சொன்னார்கள்.

கொப்பமாபுரியின் மேற்குப் பகுதியில் உள்ள வைரிசெட்டிப்பாளையத்திலிருந்து பல அன்பர்கள் சுவாமிகளிடம் வந்து வேதாந்த பாடம் கேட்டனர். சுவாமிகளின் தலையாய சீடர்கள் சிலர், வைராக்கிய ஆத்மஞான அப்பியாசம் செய்து, ஆத்மஞான நிலைகண்டு, சிறந்து விளங்குகின்றனர். வேதாந்தப் பொக்கிஷமாகிய கைவல்ய நவநீத பாடம் சொல்லுமளவிற்கு ஞானம் பெற்றுள்ளனர்.

சுவாமிகள் இங்கிருந்து பல நல்ல நூல்களையும் இயற்றினார்கள். அவைகளில் சில.

1. நாநாசீவ வாதக்கட்டளை – பதப்பொருள் (தொகுப்பு நூல்)
2. மகாவாக்கிய விசாரம்.
3. மகா வாக்கிய விசார சங்கிரகம்
4. காரண அகங்காரக் கிரந்தி நீக்கத்தால், காரிய காம மரண நீக்கம்.
5. சர்வ துக்கமுறும் காரண வரிசையும், சர்வ துக்கமறும் காரண வரிசையும்.
6. சிந்முத்திரார்த்தம்
7. மனிதன் எக்காரணத்தால் உயர்ந்தவன்.
8 ஸ்ரீ வீரசேகர ஞான தேசிக சுவாமிகளின் திருவெம்பாவையும், திருப்பள்ளி எழுச்சியும்.
9. ஸ்ரீ வீரசேகர ஞான தேசிக சுவாமிகள் சரிதம். (அந்தாதிக் கவிகள்)
10. ஏகாம்பரக் குப்பம் பேட்டை ஸ்ரீ வீரசிவனாந்த யதீந்திர சுவாமிகள் சரித்திரம்

இவைகளன்றி , அநேக இதழ்களுக்குச் சுவாமிகள் எழுதிய வேதாந்தக் கட்டுரைகள்.

சுவாமிகட்கு தமிழ் கூறும் நல்லுலக வேதாந்த ஞானிகள் அளித்த விருதுகள்:

1. அத்வைத சித்தாந்தப் பிரகாசகர்.

2. வேதாந்தப் பேராசிரியர்.

ஸ்ரீ மகா கோவிந்த சுவாமிகளின் 80 ஆம் ஆண்டு நிறைவு 13.8. 1988 ஆம் நாள் சனிக்கிழமை மிகவும் சிறப்பாக நடந்தது.

அதுபோழ்து, அவரது சீடர்கள் சுவாமிகளின் ஞான அனுபவ அற்புதங்களைப் போற்றி, அவரது திருவடிகட்குக் காணக்கையாக்கி மலர் " மகாகோவிந்தம்".

**சமாதி கோயில்**

பின்னர் சுவாமிகள், ஸ்ரீ இராமாசிரமத்திற்கு அருகிலேயே ஸ்ரீ சங்கர ஆசிரமம் அமைத்தார்கள். ஜீவன் முக்த நிலையில் வாழ்ந்து, தியானித்தலும் போதித்தலும் தம் கர்மமாகக் கொண்ட அந்த ஞானி, பிரஜோத்பதி வருடம் ஆடி 14 ஆம் நாள் செவ்வாய்க்கிழமை, கிருஷ்ணபட்சம், சதுர்த்தி திதி, பூரட்டாதி நட்சத்திரம்(30.7.1991) அன்று சமாதி நிலை கண்டு, ஸ்ரீ சங்கர ஆசிரமத்தில் அருவுருவத் திருமேனியாகிய, லிங்கத் திருமேனி கொண்டு அருள்செய்து வருகிறார்கள்.

ஸ்ரீ மாக கோவிந்த சுவாமிகள் என்கிற வேதாந்த ஞான ஜோதி : நம் மண்ணில், நம்முடன் தங்கி, வேதாந்த சொரூபப் பேரொளியில் கலந்து, இன்றும் நம் அஞ்ஞானம் அகல அருள்புரிவது, நாம் பெற்ற பெரும் பேறு.

ஸ்ரீ மகாகோவிந்த சுவாமிகள் சமாதி உள்ள ஸ்ரீ சங்கர ஆசிரமத்தையும் , அவர்கள் தங்கி தவமியற்றி பாடம் போதித்த ஸ்ரீ இராம ஆசிரமத்தையும், கொப்பமாபுரி பெரியபண்ணை திருமதி.ஆர்.யசோதை அம்மாள் அவர்கள் நிர்வகித்து வருகிறார்கள்.

சுவாமிகள் சேமித்து வைத்துப் படித்துப் போற்றி வந்த இலக்கண, இலக்கிய , வேதாந்த நூல்கள் அனைத்தும், சுவாமிகள் பிறந்த ஊரான இராஜபாளையத்திலுள்ள ஸ்ரீமதி லிங்கம்மாள் சாஸ்த்ர பிரதிஷ்டா என்ற நூலகத்தில் முறையாக வைக்கப்பட்டு, அன்பர்கள் பயனடைந்து வருகிறார்கள்.

தன்னையுந் தனக்கா தாரத் தலைவனை யுங்கண் டானேல்
பின்னையத் தலைவன் தானாய்ப் பிரமமாய்ப் பிறப்புத் தீர்வன்
உன்னை நீ அறிந்தா யாகில் உனக்கொரு கேடு மில்லை
என்னை நீ கேட்கை யாலே ஈதுப தேசித் தேனே.

- கைவல்ய நவநீதம்.



# தெய்வீக அளவுகோல்கள்

**என் அன்பிற்குரிய நண்பர்களே,**

எத்தனை முறை பிரார்த்தனை செய்யப்பட்டது. எத்தனை தடவை மந்திரங்கள் ஜபிக்கப்பட்டன. எத்தனை முறை விளக்குகள் ஏற்றப்பட்டு ஆரத்தி காண்பிக்கப்பட்டது. எத்தனை முறை மணி அடிக்கப்பட்டு, மறை நூல்கள் வாசிக்கப்பட்டன போன்றவற்றால் மனித செயல்களை தெய்வீக அளவு கோல்கள் மதிப்பிடுவதில்லை. உங்கள் இதயத்தில் எழும் எண்ணங்களின் தரத்தைப் பொறுத்து, எத்தகைய வார்த்தைகளை நீங்கள் உங்கள் அண்டை அயலாரிடம் பயன்படுத்துகிறீர்களோ, அவற்றைப் பொறுத்து, உங்கள் வாழ்வை நீங்கள் யார் யாருடன் கழிக்க வேண்டும் என்று இறைவன் விதித்திருக்கிறானோ, அவர்களுடன் நீங்கள் ஈடுபடும் ஒவ்வொரு செயலையும் பொறுத்தே, தெய்வீக அளவுகோல்கள் மனிதனை மதிப்பிடுகின்றன என்று நான் திட்டவட்டமாக உங்களுக்குக் கூறுகிறேன்.

- சுவாமி சிவானந்தா






# உங்களுக்கு மன அமைதி வேண்டுமா?

**- சுவாமி சிவானந்தா**

நல்லாரோக்கியமும் பொருளாதாரப் பாதுகாப்பும் மன அமைதிக்கு மிகவும் இன்றியமையாதவை என்பது எல்லோரும் அறிந்ததே. ஆனால் இவை இரண்டும் இருப்பினும், பலரும் தொடர்ந்து மன அமைதியின்றி அல்லற்படுகின்றனர். நீங்கள் இந்த வகையைச் சேர்ந்தவர்களா? ஆமாம் என்று நீங்கள் பதில் சொன்னால் மேலும் இதைப் படியுங்கள். உங்களது தொல்லை பெரும்பாலும் நீங்களாகவே உண்டாக்கிக் கொண்டது என்பதால், அது தவிர்க்கப்படக் கூடியதே, நாம் எப்படி என்று பார்ப்போம்.

நீங்கள் அடிக்கடி பிறர் விஷயங்களில் தலையிடுகிறீர்களா? அவர்கள் தவறாகவே இருக்கலாம். ஆனால் அதை முன்னிட்டு நீங்கள் அல்லல் உறுவானேன்? யாரையும், எதையும், குறை கூறாதீர்கள். பிறருக்குத் தீர்ப்பளிக்கும் அதிகாரத்தை கடவுள் உங்களுக்குக் கொடுக்கவில்லை. எல்லோரும் அவரவரர் விருப்பப்படியே நடக்கின்றனர். ஏனெனில் அவர்களுக்குள்ளே இலங்கும் கடவுள் அவர்களை அப்படிச் செய்யத் தூண்டுகிறார். உங்கள் அமைதியைப் பாதுகாக்க நீங்கள் உங்கள் சொந்த வேலையில் மட்டும் கவனம் செலுத்தினால் போதும் என்பது ஒரு நல்ல விதியாகும்.

உங்கள் வேலையில் நீங்கள் கவனம் செலுத்துங்கள். எல்லாவற்றிற்கும் மேலாக மன அமைதிக்கு முக்கியத்துவம் தருவோர் கடைப்பிடிக்க வேண்டிய நியதி இது. இந்த உலகத்தில் எதுவுமே உங்கள் கவனத்தை வேண்டுவதில்லை. அனைத்தையும் கவனிக்க ஒரு ஆண்டவன் இருக்கிறார், உண்மையில், உங்களையும் கவனிப்பது அவர் தானே! இந்த உண்மையை மறக்கக் கூடாது.

நான் திரும்பவும் கூறுகிறேன். உங்கள் வேலையை நீங்கள் பாருங்கள். எவரையும் எதையும் குறை கூறாதீர்கள். குறை கூறுதல் என்பது திட்டுவதற்கு நிகர். ஏன்? எது நடந்தாலும், அது கடவுளின் இச்சையால் நடக்கிறது. கடவுளின் அனுக்கிரகம் இன்றி எதுவுமே நிகழ்வதில்லை. ஏதாவது நிகழ்ந்தது என்றால் அது உங்கள் பார்வையில் நல்லதாகவோ அல்லது கெட்டதாகவோ இருக்கலாம். அதற்கு கடவுளின் அனுமதி இருக்கிறது என்றுதான் பொருள். நீங்கள் அதைக் கண்டனம் செய்தால் கடவுளின் விருப்பத்தை, கடவுளின் பேரறிவை, கடவுளின் தீர்ப்பை நீங்கள் விமர்சிக்கின்றீர்கள் என்றுதானே அர்த்தம். அதைச் செய்யாதீர்கள். உங்களுக்கு அமைதி கிட்டும்.

கடவுள் பொருள்களை முழுமையாகப் பார்க்கிறார். மனிதன் பொருள்களை பகுதியாகப் பார்க்கிறான். மனிதனோ கடந்த காலம் மற்றும் எதிர்காலத்திலிருந்து பிரிந்து நிகழ்ச்சிகளை நிகழ்காலத்தில் மட்டுமே பார்க்கிறான். அதனால்தான் கடவுள் ஒற்றுமையைக் காண்கிறார். மனிதன் வேற்றுமையைக் காண்கிறான். கடவுள் பூரணமாக நியாயத்தைக் காணும் அதே தருணத்தில் மனிதனோ அதைக் காண்பதில்லை. நீங்கள் உங்களை கடவுளின் ஸ்தானத்தில் வைத்துப் பாருங்கள். நீங்களே கடவுள் என உணருங்கள். பிரபஞ்சம் அனைத்தும் உங்கள் விருப்பத்தாலேயே நிகழ்கின்றன என்றும் உணருங்கள். உடனேயே உங்களுள் அபரிமிதமான அமைதியும் ஆற்றலும் ஊற்றெடுப்பதை நீங்கள் உணர்வீர்கள்.

பிறர் உங்களைக் காரணமின்றி திட்டுவதாகவும், காரணமின்றி துன்புறுத்துவதாகவும் நீங்கள் கூறுகின்றீர்கள். அது உண்மையாகவே இருந்தாலும் கூட, அதற்காக அலட்டிக் கொள்ளாதீர்கள். நிலைமையைப் பொறுமையுடன் சமாளியுங்கள். இக்கட்டான நிலைமைகளைச் சமாளிப்பதில் அமைதி ஒரு சக்தி வாய்ந்த ஆயுதம் என்பதை நீங்கள் காண்பீர்கள். யாராவது உங்களைத் திட்டினால் கண்களை மூடிக் கொண்டு பொறுமையாக இருங்கள். பிறர் அவர்கள் விருப்பம் போல் நினைக்கட்டும். அவர்கள் விரும்புவதைச் சொல்லட்டும். இந்த உலகம் முட்டாள்கள் நிறைந்தது.

நீங்கள் அறிவுடையவராக விளங்குங்கள். எல்லோர் முன்னிலையிலும் பணிவுடன் இருங்கள். எந்த நிலைமையிலும் அடக்கமாக இருங்கள். நான் உயர்ந்தவன் அல்லது தாழ்ந்தவன் என்ற எண்ணத்தை விடுத்து அனைவரிடமும் அனைத்திடத்தும் கடவுளைக் காணக் கற்றுக் கொண்டால்தான் இது சாத்தியமாகும். கடவுள் அப்படி விரும்புகிறார். எனவே அது அப்படி இருக்கட்டும். இவ்வாறு உங்களுக்குள் சொல்லிக் கொண்டு பிறர் உங்களை நிந்திக்கையில் நீங்கள் மௌனமாக இருங்கள். கலக்கம் அடையாதீர்கள். பழிச்சொற்களை ஏற்றுக் கொண்டால் அடக்கத்திலும் தூய்மையிலும் நீங்கள் வளர்ச்சி அடைவீர்கள். ஆன்மீகத்தில் நீங்கள் உயர்வடைவீர்கள்.

உங்களைத் திட்டுபவர் அல்லது துன்புறுத்துபவர் மீது உங்கள் இதயத்தில் எந்தவிதமான பகைமை உணர்ச்சியையும் கொள்ளாதீர்கள். இது வெளிப்படையாக கோபத்தைக் காட்டுவதை விட மிகவும் மோசமானது. இது மானஸீகப் புற்றுநோய். பகைமையை வளர்க்காதீர்கள். மறவுங்கள், மன்னியுங்கள். இது ஏதோ ஒரு வெறும் லட்சியவாத பழமொழி அல்ல. உங்கள் அமைதியைப் பாதுகாக்க ஒரே வழி இது தான். உள்ளே பகையை வளர்ப்பது என்பது ஒருவனுக்கு மிகுந்த கெடுதியைச் செய்யும். உங்களுக்குத் தூக்கம் போய்விடும். உங்கள் ரத்தத்தை நீங்கள் நஞ்சாக்குகின்றீர்கள். ரத்தக் கொதிப்பும், படபடப்பும் உங்களிடம் அதிகரிக்கும். பழிச்சொல்லோ, அவதூறோ உங்களுக்கு கடந்த காலத்தில் எப்பொழுதோ செய்யப்பட்டது. இப்பொழுது அது நடந்து முடிந்துபோன ஒன்று. அது எப்பொழுதோ முடிந்து போன விஷயம். சிந்திய பால் அது. அதையே மீண்டும் மீண்டும் நினைத்து அந்த அவதூறே அல்லது பழிச்சொல்லின் துன்பத்தை ஏன் நீங்கள் நீட்டிக்கிறீர்கள்? பகைமை மற்றும் வெறுப்பு எனும் ஆறுகின்ற காயத்தை நீங்கள் குத்திக் குத்தி மீண்டும் ஏன் புண்ணாக்குகிறீர்கள்? இது மிகவும் முட்டாள்தனம் இல்லையா? இந்தச் சிறிய விஷயங்களில் நேரத்தையும் வாழ்க்கையையும் வீணடிப்பது என்பது தகாத ஒன்று. ஏனெனில் மனித வாழ்வு மிகவும் சுருங்கியது. இந்தத் தீய வழக்கத்தை விடுங்கள். உங்களுக்கு விருப்பமான வேலை ஒன்றில் பூரணமாக

மனத்தை லயிக்கச் செய்வதே நீங்கள் செய்ய வேண்டிய சிறந்த காரியமாகும்.

உங்களுக்குப் பிடித்தமான வேலை அல்லது பொழுது போக்கில் நீங்கள் சுறுசுறுப்பாக ஈடுபடுவீர்களானால் உங்களுக்கு மிகுந்த மன அமைதி கிட்டும். அப்பொழுது ஒன்றைப் பெற்றோம், ஒன்றைச் செய்தோம் என்ற மனத் திருப்தி உங்களுக்குக் கிட்டும். மனிதன் வெறும் உணவால் மட்டுமே உயிர் வாழ முடியாது என்ற பழமொழியை நினைத்துப் பாருங்கள். இதை நினைத்து பணத்தைக் காட்டிலும் மன அமைதியே பெரிது என நீங்கள் எண்ணினால் அதிக வருமானத்துடன் கூடிய நீங்கள் விரும்பாத ஒரு காரியத்தை விட குறைந்த வருமானத்துடன் கூடிய மன அமைதி தரும் ஒரு காரியத்தை நீங்கள் மனமுவந்து ஏற்பீர்கள்.

உலகப் புகழ், உலகப் பெருமையை விரும்பாதீர்கள். மானஸீக மற்றும் பௌதீக அமைதியின்மைக்கு இதுதான் முக்கிய காரணமாகும். பிறர் உங்களை மதிக்க வேண்டும் என ஏன் நீங்கள் விரும்புகிறீர்கள்? அந்த மற்றவர் பெரும்பாலும் முட்டாள் ஜனங்களே. இந்த உலகில் பெரும் வெற்றி அடைந்த மகாபுருஷர்கள் கொஞ்சம் ஞானம் உள்ளவர்களேயாவார்கள். மற்றவர்களது மதிப்பிற்காக ஏன் இவ்வளவு தூரம் அலட்டிக் கொள்ள வேண்டும்? அதற்குப் பதிலாக கடவுளது ஆசீர்வாதத்திற்காக, ஞானம் மிக்க மகான்களது ஆசிகளுக்காக நாட்டம் கொள்ளுங்கள். இதுவே செய்யத் தகுந்தது. முயல வேண்டியது.

பொதுமக்களின் கருத்துக்கு மிகுந்த முக்கியத்துவம் அளிக்காதீர்கள். பெரும்பாலும் பொதுமக்களின் கருத்து தவறாக உள்ளது. ஒழுக்க நியதிகள், நன்னெறிகள், மறைநூல் வாக்கியங்கள், பணிவாளர்கள் மற்றும் மகான்களது கருத்துக்களுக்கு முக்கியத்துவம் கொடுங்கள். நீங்கள் தவறாகவே ஆகமாட்டீர்கள்.

பொறாமை அடிக்கடி மன அமைதியைக் குலைக்கிறது. நீங்கள் எவர் மீதாவது பொறாமைப்படுகிறீர்களா? பொறாமை ஒரு வியாதி.

உங்களது அலுவலகத்தில் திரு "அ" உங்கள் பதவி உயர்வைத் தடுத்தார் என்பதோ அல்லது உங்கள் வியாபாரத்தில் திரு "ஆ" போட்டியிட்டுக்குலைத்தார் என்று நீங்களாகக் கற்பனை செய்வது தவறு. திரும்பத்திரும்ப எண்ணுங்கள். உங்களது முன்னேற்றத்தை எவரும் ஆக்கவோ அழிக்கவோ முடியாது. உங்களது தொழிலும் உங்களது வாழ்க்கையும் உங்கள் முன்வினையால் உருவாக்கப்படுகின்றது. நீங்கள் முன்னேற வேண்டும் என்று இருந்தால் உலகம் முழுவதும் ஒன்று திரண்டாலும் அதைத் தடுத்து நிறுத்த முடியாது. அதற்கு மாறாக நடக்க வேண்டுமெனில் அப்பொழுதும் உலகம் முழுவதாலும் உங்களை ஒன்றும் செய்ய இயலாது. ஒவ்வொரு மனிதனும் அவனது விதியினாலேயே ஆளப்படுகிறான். ஒருவரை சார்ந்திருப்பது போலத்தென்பட்டாலும் ஒருவரது வாழ்விலிருந்து அடுத்தவருடையது வேறுப்பட்டது ஆகும். இதை நினைவு கொள்ளுங்கள். இந்தக் கருத்தைத் தெளிவாகப் புரிந்து கொள்ளுங்கள். ஒரு பொழுதும் பிறர் மீது பொறாமை கொள்ளாதீர்கள் அல்லது உங்கள் துன்பத்திற்கு பிறரைப் பழிக்காதீர்கள்.

உங்கள் அமைதியைக் குலைக்கும் உங்களது சூழ்நிலை உங்களுக்குப் பிடிக்காமல் இருக்கலாம். சூழ்நிலையை மாற்றுவதற்குப் பதிலாக ஒரு வேளை இதில் நீங்கள் தோல்வி அடையலாம். நீங்கள் உங்களையே இப்பொழுதை விட நல்ல நிலைமைக்கு மாற்றி அமையுங்கள். இப்படி நீங்கள் வருடக் கணக்காக உங்களுக்குக் கெட்டதாகத் தென்பட்ட சூழ்நிலை அதிசயிக்கத்தக்க விதத்தில் நல்ல விதத்தில் மாறத் தொடங்குவதைக் காண்பீர்கள். நீங்கள் மேன்மேலும் தூய்மை அடையும் பொழுது சூழ்நிலையும் மேன்மேலும் ஒத்தவிதத்தில் வளர்ச்சி அடையும். எப்படி? என்று கேட்காதீர்கள் முயன்று பாருங்கள். அனுபவத்தில் தெரியும், நண்பரே.

எது நடந்தாலும் அதைப் பொறுத்துக் கொள்ளுங்கள். எதைக் குணப்படுத்த முடியாதோ அதைப்பொறுத்தேயாக வேண்டும். மகிழ்ச்சியுடன் பொறுத்துக் கொள்ளுங்கள். காலை முதல் நடு இரவு

வரை நூற்றுக்கணக்கான வசதிக்குறைவுகள், தொல்லைகள் மற்றும் துன்பங்களுடன் வாழ கற்றுக் கொள்ளுங்கள். பொறுமை, உள் பலம் மற்றும் இச்சாசக்தி உங்களிடம் அதிகரிக்கும் . பிரதிகூலமானதை அனுகூலமானதாக நீங்கள் மாற்றி அமைப்பீர்கள்.

ஒருவரது அடிப்படைத் தேவைகளுக்குக் கூட மற்றவரை அண்டி இருப்பது தான் ஒருவரது அமைதியை இழப்பதற்கான முக்கியமான காரணமாகும். பராதீனம் ப்ராணசங்கடம். பிறரை அண்டி இருப்பது என்பது துன்பம் தருவதுதான். சுதந்திரம் ஆனந்தம் அளிக்கும். எனவே தன்காலில் நிற்க முயலுங்கள். முடிந்தமட்டும் முயலுங்கள். மனப்பூர்வமாக முயன்றால் பல்வேறு துறைகளில் உங்களால் தன் காலில் நிற்க முடியும் என்பதை நீங்கள் கண்டு கொள்வீர்கள். உங்கள் உடைகளை நீங்களே துவைத்துக்கொள்ளுங்கள். உங்கள் அறையை நீங்களே சுத்தம் செய்து கொள்ளுங்கள். உங்கள் உணவை நீங்களே சமைத்துக் கொள்ளுங்கள். உங்கள் கடிதங்களை நீங்களே டைப் அடித்துக் கொள்ளுங்கள். இவற்றை நீங்கள் தினமும் செய்துதான் ஆகவேண்டும் என்பதில்லை. தீராது என்ற நிலையில் இந்தச் சிறிய திறமைகள் உங்களுக்குப் பெரும் உதவியாயமையும்.

பொறுப்புகளைத் தட்டிக் கழிக்காதீர்கள். தப்பி ஓடப்பார்க்காதீர்கள். அப்படிச் செய்தால் உங்களுக்கு மன அமைதி கிட்டாது. அதிகமான கவலைகள் தான் உங்களைச்சேரும். ஏனெனில் உங்களது கடமைகளை நீங்கள் தட்டிக் கழிக்கப் பார்க்கிறீர்கள் என்ற எண்ணமே உங்கள் மனதை அரித்து ஏற்கெனவே உங்களிடம் இருந்த கொஞ்சம் அமைதியையும் இல்லாததாக்கிவிடும் . இதை விட உங்களால் முடிந்த மட்டும் திறமையுடன் உங்களது பொறுப்புகளை நிறைவேற்றப் பாருங்கள். ஆனால் ஒன்றை முக்கியமாக இங்கே மனதில் கொள்ளவேண்டும். நான் செய்கிறேன் என்ற ஆணவத்துடன் தினமும் மேலும் மேலும் புதிய பொறுப்புகளை கூட்டிக்கொண்டு போகக்கூடாது. சாதாரண நடைமுறை பாஷையில் இதுதான் வம்பை விலைக்கு வாங்குவது எனப்பொருள்படும். இதற்கு மாறாக உங்களது பொறுப்புகளுக்கேற்ப உங்கள் புறவேலைகளை மேன்மேலும் குறைத்து நீங்கள் உடலளவில்

ஒய்வெடுத்துக் கொண்டிருந்தாலும், மனதை வெறுமையாக வைத்திருக்காதீர்கள். ஜபம் மானஸிகப் பிரார்த்தனை மற்றும் ஏதாவது பயனுள்ள நூல்களைப் படிப்பதில் ஈடுபடுங்கள். எல்லாத் தொல்லையும் மனதில் தான் ஆரம்பிக்கிறது. கடும் சொற்களும், தீய செயல்களும் மனதில் தான் உதிக்கின்றன. எனவே ஆரம்ப ஸ்தானத்தை சுத்தமாக வைத்திருங்கள். உங்கள் வாழ்வாகிய நதி ஸ்படிகம் போல தூய்மையாகப் பாயும்.

செயல்களைச் செய்வதானது தன்னம்பிக்கையை அளிக்கும். ஆரம்பத்தில் நீங்கள் தோல்வி அடைந்தாலும் பரவாயில்லை . உங்கள் குறைகளைத் திருத்திக்கொண்டு அடுத்தமுறை நீங்கள் வெற்றி அடையலாம் . நாற்காலியில் அமர்ந்து கொண்டு கவலைப்படுவதால் எதுவும் நிகழப் போவதில்லை. அது உங்களை ஒரு முழு நம்பிக்கை அற்றவராக ஆக்கும்.

சிலர் சில நல்ல காரியங்களைச் செய்யத் தொடங்கும் போதே மன உறுதி குலைந்து நம்பிக்கையை இழக்கின்றனர். அதனால் விக்கினங்கள் உண்டாகின்றன. எந்த நல்ல காரியம் செய்யும் பொழுதும் விக்கினங்கள் ஏற்படுவது இயற்கையே . நல்ல காரியம் செய்பவருடைய மன உறுதியைச் சோதிப்பதற்காகவே அவை வருகின்றன. அவரது நம்பிக்கை , உறுதி மற்றும் மனத்தூய்மையை சோதிக்கவே அவை வருகின்றன. ஏதாவது உருப்படியாகச் செய்யவேண்டும் என்று உங்களது உறுதி அதிகரிக்கின்ற அளவு எதிரிடை சக்திகளும் பலமடையும். அதைக்கண்டு மனம் தளரவேண்டாம். எடுத்த காரியத்தைக் கைவிட வேண்டாம். அதற்கு மசிய வேண்டாம். கடவுளிடமும் உங்களிடமும் நம்பிக்கை கொண்டு அந்த இடுக்கண்களை வெல்லுங்கள். சோதனைகளையும் இடுக்கண்களையும் எதிர்கொள்ளாமல் எந்தத்துறையிலும் உங்களால் பெருமையை அடைய முடியாது. தகுதித் தேர்வு எழுத விருப்பமில்லாமல் பட்டம் பெற விழைவது நியாயமாகாது அல்லவா.

இடுக்கண்களை எதிர் கொள்ள நீங்கள் தயங்கினால் உங்களால் வாழ்க்கையில் எதையுமே சாதிக்க முடியாது. ஏதோ காலத்தைக் கழிக்கலாமே தவிர, அது வாழ்வாகாது. உண்மையாக

வாழ்வது என்றால் அது இலட்சியம் உடையதாயிருக்க வேண்டும். அடைவதற்கான இலட்சியங்கள், முயல்வதற்கான குறிக்கோள்கள் இருத்தல் வேண்டும். எதிர்ப்பைச் சமாளிக்காமல் இலட்சியங்களை அடையமுடியாது. இத்தகைய எதிர்ப்புகள் உங்களது மன அமைதியைக் குலைக்கக்கூடாது. மாறாக வாழ்க்கைப் போராட்டத்தை வீரத்துடன் எதிர்கொள்ள அது உங்களுக்கு ஆற்றலை அளிக்க வேண்டும். நடைமுறை வாழ்வில் இத்தகைய எதிர்ப்புச் சக்திகளை தவிர்க்க முடியாத தீங்கு என்று கொண்டு அவற்றை அன்றாட வாழ்வின் ஒரு அங்கமாக ஏற்க நீங்கள் கற்றுக்கொள்ள வேண்டும்.

எதற்கும் வருத்தப்பட வேண்டாம். உங்களுடைய கடந்த கால அனுபவங்களிலிருந்து நீங்கள் பாடங்களைக் கற்றுக்கொள்ளுங்கள். அந்தப் பாடங்களை அடிக்கடி நினைத்துப் பாருங்கள். அந்தப் பாடங்கள் உங்கள் எதிர்காலச் செயல்களுக்கு வழிகாட்டியாக மகிழ்ச்சியில் அமையட்டும். ஆனால் கடந்த காலத்தைப்பற்றிய கவலையில் மூழ்காதீர்கள். வருந்த வேண்டாம். நான் அப்படிச் செய்திருந்தால், இப்படி ஆகியிருப்பேன் இப்படிச் செய்திருந்தால் அப்படி ஆகியிருப்பேன் என்று எண்ணுவதெல்லாம் வீணான சிந்தனையாகும். நேரம் வீண், சக்தி வீண், ஏனெனில் கவலை சக்தியைக் கரைத்துவிடுகிறது. வேறு எதுவும் அது செய்வதில்லை. உண்மை எதுவெனில் எது நடந்ததோ அது அப்படித்தான் நடக்க வேண்டும் என்பது ஆண்டவனின் திட்டம். அதற்கு மாறாக அது நடந்திருக்க முடியாது. ஒரு சிறு துகளின் அசைவு முதல் பிரபஞ்சத்தில் பிரமாண்டமான இயக்கம் வரை, கடந்தகாலம் நிகழ்காலம் மற்றும் எதிர்காலத்தின் ஒவ்வொரு நிகழ்ச்சியும் ஒவ்வொரு காரண காரியமும் எல்லாம் வல்ல, எல்லாம் அறிந்த எங்கும் நிறைந்த பரம்பொருளின் இச்சையால் இப்படித்தான் நிகழவேண்டும் என்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. நிகழ்ச்சிகள் எவ்வாறு நிகழவேண்டும் என்று விதிக்கப்பட்டிருக்கின்றனவோ அவ்வாறே நிகழ்கின்றன. அதன் இச்சைப்படியே அனைத்தும் நிகழும். கடவுளின் விருப்பத்தை மாற்ற எந்த மனிதனாலும் இயலாது. நிகழ்வது

நிகழ்ந்தே தீரும் என்பது பிரபஞ்சமெங்கும் உள்ள ஒரு உண்மையாகும். கவலைப்படுவது வருந்துவது என்பது தவிர்க்க முடியாது நிகழ்கையில் அதை எதிர்கொள்ள உங்களால் முடியவில்லை என்ற உங்கள் கோழைத்தனத்தை வெளிப்படுத்தி, ஒன்றுமில்லாத ஒன்றிற்காக உங்கள் மன அமைதியைக் குலைப்பதைக் குறிக்கும். ஒவ்வொரு நிகழ்ச்சியிலும் இறைவனின் திரு அருள் இலங்குகிறது என்பதைக் கண்டு உணர்ந்து, உங்களுக்குள்ளும், உலகத்துடனும் அமைதியாக வாழ்வது தான் அறிவுடைமையாகும்.

நீங்கள் முழுக்கவும் சுயநலவாதியாக அல்லது சில சமயங்களிலாவது நீங்கள் பிறரைப் பற்றி நினைக்கிறீர்களா? சுயநலவாதிக்கு அமைதியே கிட்டாது. மாறாக நீங்கள் சுயநலமற்று இருந்தால் எந்தப் பிரதிபலனும் எதிர்நோக்காமல் உடனேயே நீங்கள் பேரமைதியை அனுபவிப்பீர்கள். பிரதிபலன் எதிர்பார்க்காத தொண்டு தூய மகிழ்ச்சியை அளிக்கிறது. பிறரை சந்தோஷப்படுத்துங்கள், அவர்களது மகிழ்ச்சியில் நீங்கள் ஆனந்தத்தை அனுபவிப்பீர்கள். இது அனைவராலும் அனுபவிக்கக்கூடியதொன்றாகும், சிறியதோ, பெரியதோ, உங்களால் முடிந்த மட்டும் பிறருக்குத் தொண்டு புரியுங்கள். ஆனால் பிரதிபலனையோ கைம்மாறையோ எதிர்ப்பார்க்கக்கூடாது. தொண்டிற்காகவே தொண்டு செய்யப்பட வேண்டும். எப்பொழுதெல்லாம் வாய்ப்புக் கிட்டுகிறதோ அப்பொழுதெல்லாம் தொண்டு செய்யப்பட வேண்டும்.

சுமார் இருபது வருடங்களுக்கு முன்பு நடந்த நிகழ்ச்சி இது. ஒரு பெரிய நகரம். மாலை வேளை இருள் சூழும் நேரம். நான் மாலை உலாவலுக்குச் சென்றிருந்தேன். அமைதியான தனி இடத்தில் ஒரு பெண் என்னிடம் வந்து பாயிஸாஹேப், டர் லக்தாஹை (சகோதரா, எனக்குப் பயமாயிருக்கிறது) என்றாள். வினாடிப் பொழுதில் நான் நிலைமையை உணர்ந்து கொண்டேன். அந்தப் பெண்ணை ஒரு மனிதன் பின் தொடர்ந்து வந்திருக்கிறான். பயந்து போன அந்தப் பெண் எங்கு போவது என்பது தெரியாமல் தன் வீட்டுக்குப் போகும் வழியைத் தவறவிட்டு விட்டாள். நான் அவளுக்குத்

தைரியமூட்டினேன். சிறிது நேரத்தில் அவளது வீட்டை இருவருமாகச் சேர்ந்து தேடினோம் . நாங்கள் நின்று கொண்டிருந்த இடத்திலிருந்து அவளது வீடு ஒரு பர்லாங் தூரத்தில் தான் இருந்தது என்பதையும் கண்டுபிடித்தோம். நான் அவளுக்குத் துணையாகச் சென்று, அவளை அவளது வீட்டில் சேர்த்துவிட்டு, என் வழியே நான் போனேன். ஒரு சிறிய உதவிதான். அதனால் எனக்குப் பெரிய நஷ்டமொன்றுமில்லை. ஆனால் அதனால் நான் பெற்ற மகிழ்ச்சியும் மனநிறைவும் இப்பொழுது அதைப்பற்றி நினைத்தாலும் மனதில் அமைதியை அளிக்கிறது. எந்தவிதச்செலவு இல்லாமலோ அல்லது மிகக் குறைந்த செலவிலோ ஒருவர் பிறருக்குப் பல விதங்களிலும் உதவமுடியும். தேவை தூய்மையான இதயம் தான்.

வாழ்க்கையில் மன அமைதியை விரும்பும் ஒருவன் ஒவ்வொரு படித்தரத்திலும் விவேகத்துடன் செயல்பட வேண்டும். எது சரி? எது தவறு? எது முடியும்? ஒரு குறிப்பிட்ட நிலைமையில் சான்றோர்கள் சொன்ன நெறி முறை எது? மறை நூல்கள் கூறுவது என்ன? உங்கள் மனசாட்சி, கூறுவது என்ன? இந்த மாதிரி தருணங்களில் மகாத்மாக்கள் எப்படி நடந்து கொண்டிருக்கிறார்கள். ஒவ்வொரு நிலையிலும் நமது பார்வையைத் தெளிவுபடுத்திச் சரியான பாதையைக் கண்டுபிடிக்க ஆத்ம சோதனை தேவைப்படுகிறது. மனம் போன போக்கெல்லாம் போய் புலன்கள் மற்றும் உணர்ச்சிகளின் இயற்கையான வழியில் இயந்திரமாக செல்வது என்பது மாயை விரித்த வலையில் நேராகச் சென்று விழுவதேயாகும்.

பிரேயோ மார்க்கம், சிரேயோ மார்க்கம் அதாவது இனியவழி மற்றும் நல்வழி இரண்டினையும் யாண்டும் பகுத்துணருங்கள். உலகத்தவர் வழியில் செல்ல உங்கள் மனம் உங்களைத் தூண்டும் போதெல்லாம் நீங்கள் இதை மீண்டும் மீண்டும் செய்ய வேண்டும் . பிறரைக் காப்பி அடிக்க வேண்டும் என்ற எண்ணம் மிகவும் சக்தி வாய்ந்தது. அது அறிஞரையும் அடிமைப்படுத்த வல்லது. உங்கள் நண்பர்கள் எல்லோரும் ஸ்கூட்டரில் வருகிறார்கள் என்பதற்காக, ஸ்கூட்டருக்கான தேவை உங்களுக்கு இல்லாத போது ஸ்கூட்டரை வாங்கத் தேவையான பணத்தைப் பற்றிக் கவலைப்படாதீர்கள்.

உங்கள் அக்கம் பக்கத்தவர் அவர்கள் வீட்டுப்பிள்ளைகளை கலிபோர்னியாவிற்கும் கேம்பிரிட்ஜூக்கும் அனுப்பியிருக்கிறார்கள் என்பதற்காக உங்கள் மகளை அமொக்காவிற்கு அனுப்புவது எப்படி என்பது பற்றிக் கவலைப்படாதீர்கள்.

எல்லாவிதத் தூண்டுதல்களிலிருந்தும் விலகியிருங்கள். தூண்டுதல்களை உண்டாக்கும் இடங்களுக்குச் செல்லாதீர்கள். பிறகு தூண்டுதல்களைத் தவிர்க்கப் போராட வேண்டியதிருக்கும். தேவையில்லாமல் அது உங்கள் இச்சா சக்தியை வீணடிக்கும். தூண்டுதல்களைத் தடுப்பதில் நீங்கள் வெற்றி பெற்றாலும் அது உங்கள் மனதில் ஒரு ஆசையை விட்டுச் செல்லும். ஆசை அல்லது விருப்பம் சஞ்சலத்தைத் தூண்டுகிறது.

உங்கள் தேவைகளைப் பெருக்கிக் கொள்ளாதீர்கள். பிறகு பிச்சைக்காரனைப்போல திரியாதீர்கள். உங்கள் தேவைகளைக் குறைத்துக் கொண்டு ராஜாவைப் போல வாழுங்கள். வீட்டில் உங்களுக்குத் தேவையான உடைகள் இருக்கும் பொழுது, எதற்காக ஒரு துணிக்கடைக்குள் நுழைந்து பல்வேறு ரகங்களைக் காணவேண்டும்? இல்லையெனில் தேவையற்றவற்றை நீங்கள் வாங்குவீர்கள், இல்லாவிட்டால் வாங்கினால் எவ்வளவு நன்றாக இருக்கும்? என்று எண்ணி மனம் வருந்த வேண்டியிருக்கும்.

மனஅமைதியும், பொருள்களில் பேராசையும் ஒன்றுக்கொன்று முரணானவை. அவை இரண்டும் ஒத்துப் போகா. உங்களுக்கு எது தேவையோ அதைத் தேர்ந்தெடுங்கள்.

உங்கள் பொதுவான புறவேலைகளுக்கேற்ப தேவையானவற்றை மிகமிகக் குறைத்துக் கொள்ளுங்கள். ஆசைகளும் தேவைகளும் மிக மிகக்குறையுமளவு மன அமைதி மிகவும் அதிகரிக்கும் . உடைமைகள் துன்பத்தைத் தருகின்றன. இந்த விஷயம் மிகவும் தெளிவானது. இதற்கு விளக்கமே தேவையில்லை. ஒரு காரைச் சொந்தமாக வைத்திருப்பதற்குப்பதில் ஒரு டாக்ஸியில் செல்லுங்கள். சொந்த வீட்டில் வசிப்பதற்குப் பதிலாக வாடகை வீட்டில் வசியுங்கள்.

நல்லறிவு அல்லது ஞானம் இல்லாததால் நம்மில் பெரும்பாலோர் துன்புறுவதில்லை. மாறாக அந்த ஞானத்தை நமது அன்றாட வாழ்வில் நமது அன்றாட வாழ்வில் கடைப்பிடிக்காததால் தான் நாம் அல்லலுறுகிறோம். உங்களுக்கு மன அமைதி வேண்டுமென்றால் நீங்கள் செய்யக்கூடாது என்று எதையெல்லாம் நினைக்கிறீர்களோ அந்த எல்லாக் காரியங்களையும் செய்யாமல் நிறுத்துங்கள். அதைப் போல நீங்கள் செய்ய வேண்டும் என்று நினைக்கும் காரியங்களை உடனே செய்யத் தொடங்குவதும் முக்கியத்துவம் வாய்ந்ததாகும். இது உங்களை நன்னெறிப்படுத்தும். நல்ல பாதையில் நீங்கள் வந்துவிட்டால் உங்கள் வாழ்வில் கடவுள் கிருபை பாயத் தொடங்கி வாழ்வை மென்மேலும் புனிதமாக்கும். நீங்கள் மன அமைதிபெற்று உங்களைச் சுற்றிலும் அமைதியைப் பரப்புவீர்கள்.

நம்பிக்கை தேவை. அன்பு காட்டப்பட வேண்டும். தன்னலம் இன்மையைக் கடைப்பிடிக்க வேண்டும். தானம் செய்ய வேண்டும். வைராக்கியத்தைக் கடைப்பிடிக்க வேண்டும். பக்தியை வளர்க்க வேண்டும். இந்த குணங்களெல்லாம் திடீரென்று ஒரே நாளில் உங்களிடம் வந்து விடாது. உங்கள் வாழ்வின் ஒரு இயற்கையான, பிரிக்க முடியாத, முக்கிய அங்கமாக அவை ஆகவேண்டுமானால், விடாமல் பயிற்சியை மேற்கொள்ள வேண்டும்.

நீங்கள் பிறரை வெறுத்தால், நீங்கள் பிறரைத் துன்புறுத்தினால், உங்கள் வேலைக்காரர்களை நீங்கள் திட்டினால், உங்கள் குழந்தைகளை நீங்கள் இம்சித்தால், வீட்டில் உங்கள் மனைவியையும் அலுவலகத்தில் உங்கள் கீழ் உள்ளவர்களையும் நீங்கள் மோசமாக நடத்தினால், வியாபாரத்தில் நீங்கள் மக்களை ஏமாற்றினால், இவை போன்ற இன்னும் பல செயல்களைச் செய்துவிட்டு, மனஅமைதியையும் எதிர்பார்த்தால் நீங்கள் மன அமைதியையும் எதிர்பார்த்தால், நீங்கள் முடியாத ஒன்றை எதிர்பார்க்கிறீர்கள். அதுமட்டுமல்ல, அதைப்பெற உங்களுக்குத் தகுதியும் கிடையாது. பிறரது மன அமைதியைப் பெற விழைவதற்குத் தகுதி கிடையாது. எனவே உங்களை நீங்களே திருத்திக் கொள்ளுங்கள்.

ஆன்மீக முன்னேற்றத்தால் மன அமைதி ஏற்படுகிறது. ஆன்மீக முன்னேற்றம் என்பது அகமுக மார்க்கம். ஆன்மீக வாழ்வு என்பது அகமுக வாழ்வு என்பது உண்மையே. இந்த அகமுக வளர்ச்சியானது புற ஆதரவுடன் பெரிதும் ஊக்குவிக்கப்படுகிறது. அது போல புற ஒவ்வாதவைகளால் இது பெரிதும் சீரழிக்கப்படுகிறது. எனவேதான் சாத்வீக உணவு, சாத்வீக உடை, சாத்வீக படிப்பு, சாத்வீக சேர்க்கை, சாத்வீக சூழ்நிலை, சாத்வீக பழக்கவழக்கங்கள் தேவை என்று சொல்கிறார்கள். எனவேதான் பிரார்த்தனை, யாத்திரை, சுவாத்யாயம், சத்சங்கம், விரதங்கள் மற்றும் விழாக்களை அவர்கள் வலியுறுத்திகிறார்கள். இந்த சக்தி வாய்ந்த புற உதவிச் சாதனங்களை விட்டுவிடாதீர்கள். மாறாக விரைவான முன்னேற்றத்திற்கு அவற்றை உறுதியாக்க, முன்னேறிவிட்டால் அவை தாமாகவே கழன்றுவிடும்.

நீங்கள் முற்றிலும் மனம் தளர்ந்து நம்பிக்கை இழந்து இருக்கும் பொழுது, நமது மறை நூல்களின்பால் உங்கள் கவனத்தைத் திருப்புங்கள். அல்லது மகான்களிடம் திருப்புங்கள். அல்லது மகான்களின் சிறந்த நூல்களைப் படியுங்கள், அல்லது ஒரு மாதம் விடுமுறை எடுத்துக் கொண்டு தீர்த்த யாத்திரையை மேற்கொள்ளுங்கள் அல்லது ஒரு புனித இடத்திற்கு விஜயம் செய்து அங்கே பதினைந்து நாட்களோ அல்லது ஒரு பிரார்த்தனை, ஜபம், கீர்த்தனை, தியானம், நீண்ட நடைகளில் செலவிடுங்கள், சிதறுண்ட உங்கள் மனத்தையும் உடலையும் சீர்படுத்தி, உங்களிடம் புதிய தெம்பினையும் மகிழ்ச்சியையும் ஏற்படுத்த இவையெல்லாம் சிறந்த வழிமுறைகளாகும். சிலர் மது அருந்துதல் மற்றும் தவறான வழிகளில் சென்று அம்முறைகளால் தங்களது கவலைகளை மறக்கலாம் என்று தப்புக்கணக்குப் போடுகின்றனர். முடியவே முடியாது. அவர்களது தீர்வு வியாதியைக் காட்டிலும் மிகவும் மோசமானதாகும். தூக்க மாத்திரைகள் அவை. உண்மை நிலையை உங்களால் எதிர் கொள்ள முடியாத அளவுக்கு உங்களிடம் தளர்ச்சியை உண்டாக்கும். தற்கொலை மகா முட்டாள்தனம். நீங்கள் பிசாசாக மாறுவீர்கள், மனிதனாக இருக்கும் நிலையைக் காட்டிலும் அதிகம் தொல்லை நிறைந்தது.

உங்கள் மன அமைதியைப் பெருக்கிக் கொண்டே போக முயலுங்கள். இடையில் தயங்க வேண்டாம். மேலும், கீழான நிலைக்கு போக வேண்டாம். தயங்கி நிற்றலும் மோசமானது. ஏனெனில் அது சிலசமயங்களில் நிலைமையை மேலும் மோசமாக்கும். உங்கள் வாழ்க்கையின் தரத்தை உயர்த்துங்கள். அகத்தேயுள்ள செல்வநிலையே (மனநிறைவே) உண்மையான செழிப்பாகும். உங்கள் செல்வம் உள்ளே உருவாக்கப்படட்டும். உங்கள் குழந்தைகளின் செல்வம் அகத்தில் உருவாக்கப்படட்டும். ஒரு மனிதனை அவனது செயலால் தீர்மானிக்காது அவன் இப்படி இருக்கிறான் என்பதைக் கொண்டு தீர்மானிக்கவேண்டும் என்று ஆச்சாரிய புருஷர்கள் சொல்கிறார்கள். அனைத்து லௌகீக ஆவல்களையும் விடுங்கள். அதன் இடத்தில் ஆன்மீகத்தில் வளர்ச்சிடைய, துறவில் வளர்ச்சி அடைய ஆவலை வளருங்கள். எல்லா சிறிய ஆசைகள் மற்றும் ஆவல்களை இந்த ஒரு இலட்சியத்தால் இடப்பெயர்ச்சி செய்யுங்கள்.

ஒருமுறை இலட்சியத்தை உங்கள் முன் வைத்துக் கொண்டால், அதன்பின் உங்களுக்கு நீங்களே உண்மையாக இருக்க ஆரம்பியுங்கள். உங்கள் சிந்தனை, சொல், செயலுக்கிடையே மேலும் மேலும் ஒற்றுமையைக் கொண்டு வாருங்கள். நீங்கள் சொல்வதைச் செய்யுங்கள். எல்லாப் போலித்தனத்தையும் விடுங்கள். உங்கள் வாழ்விலிருந்து எல்லா போலித் தனத்தையும் அகற்றுங்கள். மன அமைதியின் முக்கிய பகைவன் போலித்தனமேயாகும்.

லௌகீக அளவில் உங்களை விட கீழான நிலையில் இருப்போருடனும், ஆன்மீக அளவில் உங்களைவிட மேல் நிலையில் உள்ளோருடனும் ஒப்புநோக்குங்கள். இது உங்களிடம் லௌகீக திருப்தியையும் ஆன்மீக அதிருப்தியையும் தூண்டும். அதில்தான் முன்னேற்றமும் அமைதியும் அடங்கியுள்ளது. ஆனால் இதற்கு மாறாக லௌகீகத்தில் உங்களைவிட மேல் நிலையில் உள்ளோருடனும், ஆன்மீகத்தில் உங்களைவிட கீழ் நிலையில் உள்ளோருடனும் நீங்கள் உங்களை ஒப்பு நோக்கினால் (அநேகர் இப்படித்தான் செய்கின்றனர்) அது பயங்கர விளைவுகளான லௌகீக அதிருப்தியையும் ஆன்மீக கர்வத்தையும் கொணரும்.

நரகத்திற்கு இது தான் நேர்வழி.

ஒரு சில நம்பகமான நண்பர்களிடம் மட்டுமே பழகுங்கள். பழக்கத்தைப் பெருக்க வேண்டாம். எவருடனும் அதிகமாக நெருங்கிப் பழகவேண்டாம். அதிக நெருக்கம் அலட்சியத்தை உருவாக்கி உணர்ச்சிகளை உருக்குலைத்து, மன அமைதியைக் கெடுக்கிறது.

காரணத்துடன் மட்டுமே பேசுங்கள், எல்லா விதமான தேவை அற்ற பேச்சையும் அளந்தே பேசுங்கள். களங்கமற்ற, நல்நோக்கம் கொண்ட வார்த்தைகளே சில வேளைகளில் தவறாகப் புரிந்து கொள்ளப்பட்டு, பிரிவை உண்டாக்குகிறது. எதிலும் எவருக்கும் புத்திமதி சொல்லப் போகாதீர்கள்....... நீங்கள் கேட்கப்பட்டாலன்றி...... உங்கள் வேலையைப் பாருங்கள்.

விவாதம் செய்யாதீர்கள். ஒரு பொழுதும் தர்க்கத்தில் ஈடுபடாதீர்கள். விவாதத்தில் வெற்றி பெற வேண்டும் என்று நீங்கள் விரும்புகிறீர்களா? அது உங்களுக்கு எந்தவிதமான உருப்படியான விளைவுகளையும் தராது. அது உங்கள் ஆணவத்தைப் பெருக்கும். மற்றவரைப் புண்படுத்தும். நண்பர்களுக்கிடையே பிளவை உண்டாக்கும்.

அடுத்த நபர் அவரது கொள்கையில் நிற்கட்டும். திருத்தவே முடியாத மகா முட்டாள்களும், நியாயத்தைப் பார்க்க வைக்கமுடியாத பரம மூடர்களும் இந்த உலகில் உளர். உங்களது காலத்தையும் பிராணனையும் அவர்கள் காலத்தையும் வீணாக்காதீர்கள், சோர்வுதான் உங்களுக்கு மிஞ்சும். பகைமை வளரும்.

எதையும் எதிர்பார்க்காதீர்கள். ஏனென்றால் எதிர்பார்ப்பு பரபரப்பையும், பரபரப்பு ஏமாற்றத்தையும் அளிக்கிறது. அன்றாடம் தபால்காரரை நீங்கள் எதிர்பார்த்து நிற்கிறீர்கள். கடைசியில் உங்கள் நண்பரிடமிருந்து நீங்கள் எதிர்பார்க்கும் அந்தக் கடிதத்தை அவர் கொண்டு வருவதில்லை. உங்கள் கலக்கத்துக்கு எல்லையே இல்லை, எதற்காக இந்த மன உளைச்சல்? எதிர்பார்ப்பு இல்லையேல் ஏமாற்றமும் இல்லை. நீங்கள் எதை அனுபவிக்க வேண்டும் என்று விதிக்கப்பட்டிருக்கிறதோ அதை அனுபவித்தோ அதில்

துன்பப்பட்டோ ஆகவேண்டும். உங்கள் துன்பம் அல்லது இன்பத்தின் அளவைக் கூட்டவோ அல்லது குறைக்கவோ எவராலும் முடியாது. இதை அறிந்த பின்னும் நீங்கள் ஏன் உங்கள் காலத்தையும் சக்தியையும் கவலையில் அழிக்க வேண்டும். கடந்த காலத்தை மறவுங்கள். எதிர்காலத்தைப் பற்றி எண்ண வேண்டியதில்லை. நிகழ்காலத்தில் வாழுங்கள். உங்கள் முழுத்திறமையையும் பயன்படுத்தி உங்களது பொறுப்புகளை உங்கள் முன் அவை எவ்வாறு தோன்றுகின்றனவோ அவ்விதமே நிறைவேற்றுங்கள். பலன்களைக் கவனிக்க கடவுள் ஒருவர் இருக்கிறார்.

எனக்கு என்ன நேரிடுகிறது என்பதைப் பற்றி எனக்கு கவலையில்லை. ஆனால் பிறரைப் பற்றித் தான் எனக்குத் கவலை என்று சிலர் சொல்லுவர். இது இன்னொரு வித அறியாமையாகும். இவ்வாறு சொல்பவர்கள் தங்களைத் தாங்களே ஏமாற்றிக் கொள்ளுகிறார்கள். உங்கள் மகனின் பைத்தியக்காரத்தனம் பற்றியோ அல்லது உங்கள் மகள் வேறு ஒருவனுடன் ஓடிவிட்டாள் என்பது பற்றியோ நீங்கள் கவலைப்படாதீர்கள். எல்லாவிதத்திலும் வாழ்வின் துக்கங்களைக் குறைப்பதற்கு உங்களால் முடிந்த அனைத்தையும் செய்யுங்கள். ஆனால் தனிமனிதனும் அவனவனுடைய பூர்வஜன்ம வினையினால் ஆளப்படுகிறான். (உலகின் எல்லாப் பகுத்தறிவுவாதிகளும் என்ன வேண்டுமானாலும் சொல்லட்டும்) ஒருவனது தலைவிதியை கொஞ்சம் கூட மாற்ற எவராலும் முடியாது. "அ", "ஆ" வுக்கு உதவியோ தொல்லையோ கொடுக்கும் போது "அ" மூலம் கடவுள்தான் செயல்படுகிறார். "அ" செயல்படுவதில்லை. (இல்லை அது "ஆ" வின் பூர்வ ஜன்ம வினை). ஒரு முறை இதை நீங்கள் புரிந்து கொண்டால் நீங்கள் மற்றவர்களைப் பற்றியோ அல்லது உங்களைப் பற்றியோ கவலைப்பட மாட்டீர்கள். கவலை சக்தியை உறிஞ்சி நேரத்தை வீணாக்குகிறது. அது பேடித்தனம். கவலைப்படுபவன் ஆன்மீக விதிகளைப் பற்றி அறியாமையை வெளிப்படுத்துகிறான்.

உங்களைப் பற்றி எவருமே நாட்டம் கொள்வதில்லை. இந்த விஷயத்தை நன்கு நினைவில் கொள்ளுங்கள். உங்களது ஒவ்வொரு

மோசமான நிலைமையிலும் உங்களது உதவிக்கு உலகம் ஓடிவரும் என்று எதிர்பார்க்காதீர்கள். கடவுளிடம் நம்பிக்கை கொண்டு தொடர்ந்து முயற்சியில் ஈடுபடுங்கள். உங்களுக்கு கடவுள் துணை இருந்தால் உலகமெல்லாம் எதிர்த்தாலும் நீங்கள் வெற்றி அடைவீர்கள். ஆனால் நீங்கள் கடவுளை இழந்து உலகின் உதவியை எல்லாம் பெற்றாலும் நீங்கள் தோல்வியே அடைவீர்கள். கடவுளின் நட்பைப் பெறுங்கள். அதுவே மிகச்சிறந்த செல்வம். அதைப் பெற்று விட்டால் மனஅமைதி உங்களுடையதே. இப்பொழுது உங்களிடம் அனைத்தும் இருக்கிறது. பயம் ஓடிவிட்டது பரபரப்பும் மறைந்துவிட்டது.

அனைத்திலும் ஆண்டவனைக் காணுங்கள். அனைவரிடமும் அனைத்திடத்தும் ஆன்மீக அளவில் ஒருமைப்பாட்டை உணருங்கள். படைப்பின் மற்றவற்றிடமிருந்து நீங்கள் வேறல்ல. உங்களிடம் உள்ள அதிசயமான வாழ்க்கைத் தத்துவத்தின் மற்றொரு பெயரே கடவுள். அதை வாழ்க்கை என்று அழையுங்கள். உணர்வு என்று அழையுங்கள். இருப்பு என்று அழையுங்கள். இந்த அதிசயத் தத்துவம் எங்கும் நிறைந்தது. என்றும் உள்ளது. காரண காரியம் அற்றது. மகிழ்ச்சியாயிருங்கள், உங்களிடம் நிலவும் கடவுளுக்குப் பெருமை சேர்க்கும் விதத்தில் சிந்தியுங்கள், பேசுங்கள், நடவுங்கள். கயமை, இழிகுணம் , ஏமாற்றத்தனம், சுயநலம் ஆகியவற்றை ஒதுக்குங்கள், அனைவருடனும் ஆன்மநேய ஒருமைப்பாட்டை உணருங்கள். நேரிய பாதையில் உங்கள் வாழ்க்கை செல்லத்தொடங்கும். உங்கள் ஆன்மீக முன்னேற்றம் விரைவாயிருக்கும், நீங்கள் விரும்பும் அனைத்து மன அமைதியும் உங்களிடம் நிலவும்.

தினமும் காலையில் படுக்கையை விட்டு எழுந்திருக்கும்போது இரண்டு நிமிடம் கடவுளிடம் பிரார்த்தனை செய்யுங்கள். உங்களைப் படைத்தவருக்காக இந்த நேரத்தை நீங்கள் ஒதுக்கலாம் இல்லையா? இறைவா! இன்று உமது விருப்பத்தை நிறைவேற்ற எவ்விதம் நீர் விரும்புகிறீரோ அவ்விதம் என்னைப் பயன்படுத்துவீராக. நான் என்னை ஒன்றுமில்லாதவனாக ஆக்கி, உங்கள் பொறுப்பில் என்னை முழுக்கவும் விட்டுவிடுகிறேன். பல வருடங்களுக்கு முன்

அகில இந்திய வானொலியில் நான் ஒரு பாடலைக் கேட்டேன் . அதில் ஒரு வரி இன்னும் என் நினையில் இருக்கிறது. அனைவரும் அதை படுக்கையிலிருந்து எழுந்திருக்கும் முன் உச்சரிக்கலாம். ஆஜ் மேரி கதி தும்ஹாரி ஆரதி பன்ஜாய் (இன்று என் வாழ்க்கை உமக்கு நான் செய்யும் ஆரத்தியாக அமையட்டும்) இதை நீங்கள் சொன்னால், நாள் முழுவதும் உங்கள் பிரார்த்தனையை நினைவு கூர்ந்தால், தவறான செயல் செய்வதற்கு முன்னும், தடுமாறி விழும் முன்னும் நீங்கள் அன்றைய தினத்தின் முடிவில் பகவானுக்கு நீங்கள் செலுத்தும் மாலையில் அதிகமதிகம் பூக்கள் அமையும் விதத்தில், அதிகம் நல்ல செயல்களால் அன்றைய தினத்தை நிரப்புவீர்கள்.

வாழ்க்கையில் நேரிடும் ஒவ்வொரு அனுபவத்தையும் அது வரும் விதத்திலேயே முணுமுணுக்காதீர்கள், எரிச்சல் கொள்ளாதீர்கள், வருந்தாதீர்கள், மகிழ்ச்சி அடையவும் வேண்டாம், அமைதியாயிருங்கள். செயலும் விளைவும் எப்பொழுதும் அன்றாட வாழ்வில் உண்டு. இப்பொழுதும் அன்றாட வாழ்வில் உண்டு. இப்பொழுது நீங்கள் சிரித்தால் பின்னர் நீங்கள் அழவேண்டியிருக்கும். தீய எண்ணத்துடன் எதைப்பற்றியாவது நீங்கள் மகிழ்ச்சி கொண்டால், நீங்கள் தொல்லைகளை விலை கொடுத்து வாங்குகின்றீர்கள், சமமான தரைப்பரப்பில் நீங்கள் ஒரு மண்மேட்டை உருவாக்க விரும்பினால் வேறு ஏதாவது ஒரு இடத்தில் நீங்கள் பூமியைத் தோண்டி மண் எடுக்க வேண்டியதிருக்கும். பள்ளம் இன்றி மேடு இல்லை. கண்ணீர் இன்றி களிப்பு இல்லை. எனவே யாண்டும் சமநிலையில் இருங்கள். எப்பொழுதும் அடக்கமாக இருங்கள். எக்களிப்பையும், சிரிப்பையும் மற்றும் தற்காலிகமாக கவலையை மறைக்கும் மகிழ்ச்சியையும் விட அடக்கம் மேலானது.

உங்கள் வாழ்வில் ஒவ்வொரு நிகழ்ச்சியையும் இறைவனது விருப்பமாக ஏற்றுக்கொள்ளக் கற்றுக் கொள்ளுங்கள். இறைவா! உமது விருப்பமே நிகழும். வாழ்க்கையில் நிகழும் ஒவ்வொரு நிகழ்ச்சிக்கும் இதுவே உங்கள் ஒரே பிரதிச்செயலாக இருக்கட்டும். உங்களது உண்மையான நண்பன் கடவுளே. அவரே உங்களது மிகப்பெரிய நலம் விரும்பி. உங்களை உருவாக்க, திருத்த,

செம்மைப்படுத்த, அவரது விருப்பத்தை நல்லதொரு கருவியாக இருந்து செயல்படுத்த, நல்லது, தீயது ஆகிய பல்வேறு அனுபவங்களை அவர் உங்களுக்குத் தருகிறார். அவரது தெய்வீக கரங்களால் உங்களை திருத்தி அமைக்க அனுமதித்து விடுங்கள். உங்களை அவரது பொறுப்பில் விட்டுவிடுங்கள்.

போரிட வேண்டாம். எதிர்க்க வேண்டாம். கடவுளின் இச்சையால் உங்களை உருவாக்க விட்டுவிடுங்கள். ஊழிப் பெரும் காற்றில் நீங்கள் ஒரு துரும்பாக ஆகி விடுங்கள். தனிப்பட்ட ஆணவம் வேண்டாம். கடவுள் இருக்கிறார். அவரது இச்சை செயல்படுகிறது என்பதை நீங்கள் உணர்ந்தால்தான். மனிதனுடைய அனைத்து முயற்சிகளை இயக்குவது, கடவுளின் இச்சா சக்தியே என்பதை நீங்கள் உணர்ந்தால் தான், இவ்வாறு நீங்கள் ஆகமுடியும். பணிவு அதிகமானால் சக்தியும் அதிகரிக்கும். கடவுளது இச்சைக்கு நீங்கள் எதிர்ப்புத் தெரிவிக்காததால் உங்களது வாழ்க்கையும் செம்மையாகச் செல்லும். அதில் எந்தவித சிக்கலும் வராது. உங்கள் விருப்பம் மற்றும் முயற்சியால் நீங்கள் எதையும் சாதிக்க முடியாததால் அங்கே எவ்வித தோல்வியும் இராது. வெற்றிடத்தை நோக்கி காற்று பாய்வது போல ஆணவம் அகன்ற உங்களுக்குள்ளே இறை அருள் மற்றும் ஆற்றல் பாய்வதால் உங்கள் வாழ்க்கை மிகப்பெரும் வெற்றியாக மாறி அமையும். இதுவே நியதி.

அகில உலகமும் தங்களது போகத்திற்காகவே படைக்கப்பட்டுள்ளது. அனைத்தும் அனைவரும் இப்பரந்த உலகில் தங்களது விருப்பத்திற்கிணங்கவே செயல்படவேண்டும். அவர்களது திட்டத்திற்கு உலகம் முழுவதும் இணங்க வேண்டும் என்று மன அமைதி அற்ற மக்கள் கற்பனை செய்வதுதான் அடிப்படையான தவறாகும். இந்த உலகத்திலிருந்து இன்பத்தைப் பிழிந்தெடுக்க முயாலதீர்கள். அதைவிட நல்ல பாம்பின் பல்லிலிருந்து நீங்கள் அமிருதத்தை எடுத்து விடமுடியும். தோல்வி, எமாற்றம், கலக்கம், துன்பம் இவற்றைத்தான் நீங்கள் சந்திப்பீர்கள். அதைவிட உலகத்தின் உண்மை நிலையைப் புரிந்து கொள்ளுங்கள். உங்கள் அனுபவத்திற்காக உங்கள் வளர்ச்சிக்காக உருவாக்கப்பட்டது இந்த

உலகம். ஒவ்வொரு அனுபவத்தின் மூலம் புத்திசாலியாக ஆன்மீகத்தில் பழுத்தவராக மாறுங்கள். அனுபவமே கல்வி. தனது இன்பத்திற்காக இந்த உலகம் உண்டாக்கப்பட்டிருக்கிறது என்று நினைப்பவன் முட்டாளே. அனித்யம், அஸுகம், லோகம், அசாஸ்வதம், துக்காலயம். உங்கள் மறை நூல்களை பக்தியுடன் படியுங்கள். அவற்றின் போதனைகளை யாண்டும் நினையுங்கள். அதன்படி வாழுங்கள். இதைத் தவிர மன அமைதிக்கு வேறு மார்க்கமே கிடையாது.

இறுதியாக இந்த உலகம் முழுக்கவும் பொய்யானது என்பதை நம்புங்கள். அனைத்து மகான்களும் ஒரே குரலில் திட்டவட்டமாக இந்த வியவஹாரிக உலகம் வெறும் கனவுலகமே, உலக அனுபவமே என்று கூறியுள்ளனர். அவர்கள் தாங்களே அனுபவித்து உணர்ந்த பிறகுதான் இந்த உலகம் அநித்தியம், தூய உணர்வே நித்தியம் என்று கூறியுள்ளனர். அவர்கள் முட்டாள்கள் அல்ல. அல்லது நீங்கள் கெட்டிக்காரர்களுமல்ல. கசப்பான அனுபவங்களை நீங்கள் அனுபவிக்கும்போது கூட, இஃதனைத்தும் பொய்யே. நான் தூய உணர்வு சொரூபி, நானே கடவுள் என்று சொல்லுங்கள்.

**அன்பர்களே!**

இச்சிறு நூலைப் படித்து விட்டீர்கள் அல்லவா! திரும்பத் திரும்பப் படியுங்கள். எப்பொழுதெல்லாம் உங்கள் வாழ்வில் பிரச்சனைகள் தோன்றி உங்களது மன அமைதி குலைகிறதோ அப்பொழுதெல்லாம் இதை நிதானமாகப் படியுங்கள். படித்தபின் நீங்கள் படித்தவற்றை முடிந்த அளவு செயல்படுத்த முனையுங்கள். உங்களது மன அமைதி கூடும்.

உங்கள் நண்பர்களுக்கும் இதைப் படிக்கக் கொடுங்கள். முடிந்தால் நீங்களே இந்நூலை அச்சிட்டு ஆயிரக்கணக்கில் விநியோகம் செய்யலாம். இது ஒரு மாபெரும் ஞான யக்ஞமாகும்.

உங்களுக்கு இறைவன் எல்லா நலன்களையும் அருள்வாராக.

# தேசிய ஒழுக்க நியதி: இந்தியக் குடிமக்களுக்கு

1. உங்களது தேசமே உங்கள் வாழ்க்கையின் மிக மேலானதும் முதலாவதுமான கவனத்திற்குரியதாகும். நாட்டின் நலனே உங்கள் சொந்த நலனாகும். எனவே உங்களது நாடான இந்தியாவிற்காக உங்களது உயிரையும் கொடுக்க எப்பொழுதும் தயாராயிருங்கள்.

2. **கடமை:** உங்களது மிக முக்கிய கடமை கடவுளுக்கும் அவரது நேர்மைக்குமாக வாழ்வதேயாகும். நேர்மையான வாழ்க்கை வாழ்வதுதான் நீங்கள் உங்கள் தேசத்திற்குச் செய்யக்கூடிய மிகவும் மதிப்புடைய தொண்டு ஆகும்.

3. **ஒழுக்கம்:** ஒழுக்கமே மிகப் பெரும் செல்வம், குடிமகனின் தூய அப்பழுக்கற்ற ஒழுக்கமே உங்கள் நாடான இந்தியாவின் மாபெரும் மூலதனமாகும். இது மிகவும் முக்கியமானது.

4. **ஆரோக்கியம்:** வாழ்க்கையின் வெற்றிக்கான அடிப்படையே ஆரோக்கியம்தான், ஆரோக்கியமே செல்வம். ஒழுக்கத்திற்கு அடுத்தபடியாக அதுதான் மிகப்பெரும் தேசிய பொக்கிஷம், மூலதனம். ஒழுக்கத்தை உருவாக்குவதும், ஆரோக்கியத்தைப் பேணிப் பாதுகாப்பதுமே தேசத்தின் குடிமக்கள் என்ற முறையில் உங்களது முதல் கடமையாகும்.

5. மது அருந்துதல், போதை பொருட்களை பயன்படுத்துதல், புகைப்பிடித்தல், வெற்றிலை புகையிலை போடுதல், சூதாடுதல் போன்ற தீயபழக்கங்களைத் தவிருங்கள், லஞ்சம், ஊழல், சுயநலம், ஒழுக்கக்கேடு, நேர்மையின்மை, தீயநடத்தை ஆகிய தீமைகளைத் தவிருங்கள். தேசத்துரோகம் என்பது மிகக் கொடிய குற்றம் . மிகக் கொடும் பாவம் ஆகும்.

6. குடிமக்களே! எல்லா பொதுச்சொத்துக்களின் பாதுகாவலர்கள் நீங்களே. தேசத்தின் சொத்தை சேதமாக்கவோ, தவறாகப்

பயன்படுத்தவோ, திருடவோ அல்லது அழிக்கவோ செய்யாதீர்கள். அதை கவனமாகப் பாதுகாக்கவும்.

7. உங்கள் தேசத்தின் எல்லாக் குடிமக்களும் உங்கள் சகோதர சகோதரிகளே, இந்த சகோதரத்துவத்தை உணருங்கள். உடன் வாழும் எல்லாக் குடிமக்களுடனும் அன்பு செலுத்தி ஒற்றுமையாய் வாழுங்கள்.

8. எல்லாச் சமயங்கள் மற்றும் நம்பிக்கையின்பால் சமமான மதிப்பும், மரியாதையும் கொண்டு விளங்குங்கள், எல்லாச் சமயங்களைச் சேர்ந்தவர்களையும் உங்கள் ஆன்மீக சகோதரர்களாகக் கருதி அன்பு செலுத்துங்கள்.

9. எந்த வகையிலான வன்முறையையும் எந்த முறையிலான வெறுப்பையும் தவிருங்கள். ஏனெனில் இது தேசத்தின் அரிய பெயருக்கு ஒரு இழுக்காகும்.

10. எளிய வாழ்வையும் உயரிய சிந்தனையையும் கொண்டு வணங்குங்கள். ஊதாரித்தனமாக இருக்காதீர்கள். எல்லா விதத்திலும் வீண் விரயத்தை தவிருங்கள். சிக்கனத்தைக் கடைப்பிடியுங்கள்.

11. சமூக நீதியையும், சட்டத்தையும் மதித்து நடப்பதைப் போற்றுங்கள்.

12. உங்களிடம் இருப்பதை உங்களைவிடக் கீழ் நிலையில் இருக்கும் சகோதரக் குடிமக்களுடன் பகிர்ந்து கொள்ளுங்கள். உங்கள் குழந்தைகளிடமும் உங்கள் குடும்பத்தாரிடமும் தேசத்தின்பால் அன்பு, தேசப்பற்று, தொண்டில் நாட்டம் ஆகியவற்றை வளருங்கள். இவ்வாறாக உண்மையான குடிமகனாக விளங்குங்கள். உங்கள் சொந்த வாழ்க்கை மற்றும் நடந்தையின் மூலம் உங்கள் நாட்டிற்கு உங்களால் முடிந்த மட்டும் தொண்டு செய்யுங்கள்.

**தேச பக்கதர்களால் தொகுக்கப்பட்டது.**

ஓம்

# சத் சங்கத்தின் பயன்

உலக விஷயங்களில் உள்ள தீவிரமான ஈடுபாடுகளையும் பற்றுகளையும் விட்டுவிட வேண்டும்.

ஆத்மாவை அறியும் விருப்பத்தோடு, விரைவாக வீட்டை விட்டு வெளிவர வேண்டும்.

சாது ஜனங்களுடன் சேர்ந்திருக்க வேண்டும்.

"சந்தனம் உடலுக்கும் உள்ளத்துக்கும் குளிர்ச்சி தருவது போல், சத் சங்கம் குளிர்ச்சி தரும்" என்று 'சுபாஷிதம் கூறுகிறது.

சத் சங்கத்தால் அஞ்ஞானம் போகும்; சத்தியம் நிறைந்து தழும்பும்; பாவம் போகும்; மனம் தெளிவடையும்; கீர்த்தி பரவும்.

சத் சங்கத்தால் விவேகமும் வைராக்கியமும் உறுதி பெறும்.

தீயவைகளிலிருந்து விலக வேண்டும். நல்லதில் நிலைத்திருக்க வேண்டும்.

சத் சங்கத்தால் இது சாத்தியமாவதும், அந்தக் கரணத்தில் விசுவாசம் உண்டாவதும், ஆத்ம பலம் பெறுவதும் சத் சங்கத்தின் பயன்களாகும்.

"சத் சங்கத்வே நித் சங்கத்வம்" - என்று பஜகோவிந்தத்தில் சங்கரர் பாடுகிறார்.

சாரதா அச்சாலயம், வைரிசெட்டிப்பாளையம். ✆ 04327-252234, 9843239997.